# அருள்மிகு

# சோலை வளர்த்த அய்யனார் திருக்கோயில்

# குடமுழுக்கு விழா மலர்



தாரண ஆண்டு பங்குனித் திங்கள்

10 ம் நாள் 23. 03. 2005 புதன்கிழமை

உ
சிவமயம்
ஸ்ரீ சோலையாண்டவர் துணை







# கொத்தரி
# அருள்மிகு சோலைவளர்த்த அய்யனார் திருக்கோயில்
## அஷ்டபந்தன மகாகும்பாபிஷேக அழைப்பிதழ்

கோத்திரம் பெருகிவாழ்க குபேர செல்வம் வளர்க
சாஸ்திரம் நீதியோங்க தர்மமும் ஜெயமும் பெருக
ஆத்திரம் அல்லல் வினைகள் அருகினில் வராது செல்ல
கொத்தரிவனத்தில் திகழும் சோலைவளர்த்தய்யனார்
பொற்பாதம்பணிவோம் வாரீர்

விரைமலர் தந்திடும் கொத்தரி சார்ந்தே
மனமகிழ் மங்கலம் நாளும் பொலிந்திட
அன்பருள் நல்கிடும் சோலையாண்டவர்
அடிகள் பணிந்திடும் அகமே.

பேரன்புடையீர்,

சிவகெங்கை மாவட்டம், காரைக்குடி வட்டம், பள்ளத்தூர் சேகரம், கொத்தரி கிராமம் வனவளாகத்தில் புராதன காலமாக எழுந்தருளி அருள்பாலிக்கும் அருள்மிகு சோலை வளர்த்தய்யனார் திருக்கோயில் திவ்விய நூதன ஆலய பரிவார மூர்த்திகள் சிற்றாலய அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேக திருக்குட நன்னீராட்டு பெருவிழா.

திருவளர்ந்தோங்கும் செந்தமிழ் பாண்டி நாட்டில் நிலவளம், நீர்வளம், சோலைவளமிக்க ஆரண்ய வனத்தில் எழுந்தருளி முனிவர், சித்தர்களுக்கு அருள்பாலித்து காக்ஷி தந்து கொற்றவால்புரி ஹரிஹரபுத்திரன் கலியுகவரதன் தர்ம சாஸ்தா ஸ்ரீ சோலையாண்டவர் என சிறப்புமிக்க திவ்விய நாமம் பெற்று பூஜிக்கும் மக்களுக்கு சகல சௌபாக்கியங்களும் வழங்கி வரும் பெருமானுக்கு அப்பெருமானின் பரிபூரண அனுக்கிரகத்தால் அருளாளர் ஆன்மீக பெருமக்கள், நன்மக்கள் முயற்சியால் பாரம்பரியமிக்க அவ்வூர் ஆண்டோர்களான கொத்தரி நான்குகரை வல்லம்பர்களால் திவ்விய நூதன அஷ்டபந்தன ஆலய நன்னீராட்டு விழா நடைபெறவுள்ளது. எதிர்வரும்

நிகழும் கலியுகாதி வருஷம் 5150 மங்களகரமான தாரண வருடம் பங்குனி மாதம் **10–ம் தேதி 23-3-2005, புதன்கிழமை** பூர்வ பக்ஷம் திரயோதசி திதி மகம் நக்ஷத்திரம் குருகால ஹோரை சித்த அமிர்தயோகம் கூடிய சுபயோக சுபதினத்தில் காலை **மணி 9-30 க்கு மேல் 10-45 மணிக்குள்** ரிஷப லக்கனத்தில் ஜெயவேளையில் **மஹா கும்பாபிஷேகம்** நடைபெறும். அது சமயம் பக்தகோடிகள் அனைவரும் சுற்றம் சூழ வருகை தந்து கலியுக வரதன் ஐயப்பன் நன்னீராட்டு விழாவைக் கண்டு களித்து ஆண்டவன் திருவருளைப் பெற்றுய்யுமாறு பெரிதும் வேண்டுகிறோம்.

இங்ஙனம்

**கொத்தரி நான்குகரை வல்லம்பர்கள்**

### நிகழ்ச்சி நிரல்

யாகசாலை பூஜைகள்
கொத்தரி சிவாச்சாரியார்கள்: **மு. சாமிநாத பண்டிதர், நா. பாண்டியராமன் பண்டிதர்** அவர்களால் நடைபெறும்.

| ஆங்கில தேதி | தமிழ் தேதி | கிழமை | நேரம் | நிகழ்ச்சி விபரம் |
|---|---|---|---|---|
| 21-3-2005 | பங்குனி மாதம் 8-ம் தேதி | திங்கள் கிழமை | அதிகாலை 4-30 முதல் 7-30 மணிக்குள் | அநுஞ்ஞை விக்னேஸ்வரர் பூஜை, கோ பூஜை, வாஸ்து சாந்தி, புண்யாவாசனம், கணபதி ஹோமம், மிருத சங்கிரணம், பிரவேசபலி, நவக்கிரக ஹோமம், அஷ்டலெட்சுமி ஹோமம், பூர்வாங்கம் |
| | | | மாலை 4-30 முதல் 6-00 வரை | கடஸ்தாபனம், கும்ப அலங்காரம் |
| | | | 6-00 முதல் 7-30 வரை | முதல்கால யாக பூஜை |
| | | | 7-30 முதல் 9-00 வரை | பூர்ணாகுதி, தீபாராதனை |
| 22-3-2005 | பங்குனி மாதம் 9-ம் தேதி | செவ்வாய் கிழமை | காலை 7-30 முதல் 9-00 வரை | இரண்டாம் கால யாக பூஜை, பூர்ணாகுதி தீபாராதனை |
| | | | முன்இரவு 7-30 முதல் 9-00 வரை | மூன்றாம் கால யாக பூஜை, பூர்ணாகுதி தீபாராதனை |
| 23-3-2005 | பங்குனி மாதம் 10-ம் தேதி | புதன் கிழமை | காலை 6-00 முதல் 7-30 வரை | நான்காம் கால யாக பூஜை, மகா பூர்ணாகுதி தீபாராதனை |
| | | | காலை 9-00 முதல் 9-30 வரை | கலசங்கள் புறப்பாடு |
| | | | 9-30 முதல் 10-45 மணிக்குள் | **மகா கும்பாபிஷேகம்** |

குறிப்பு : **23-3-2005–ம் நாள் புதன்கிழமை இரவு 8-00 மணியளவில் ஆண்டவரின் திருவீதி உலா**
மேலே கண்ட நிகழ்ச்சியில் வடபாதி மங்களம் பால்முருகன் குழுவினர் ஸ்பெஷல் **மேளக்கச்சேரி** நடைபெறும்.
22-3-2005–ம் நாள் செவ்வாய்கிழமை மாலை 7-00 மணியளவில் **பட்டிமன்றம்** நடைபெறும்.
23-3-2005–ம் நாள் புதன்கிழமை இரவு 9-00 மணியளவில் கொத்தரி நாட்டார் கலையரங்கத்தில் **பிரபல இன்னிசைக் கச்சேரி** நடைபெறும்.

## கொத்தரி அருள்மிகு சோலைவளர்த்த அய்யனார் திருக்கோவில் அறங்காவலராக 1948க்கு முன்பு நான்குகரை வல்லம்பர்கள் சமுதாய பேரவை கீழ்க்கண்டவர்களை தேர்ந்தெடுத்து நிர்வாகம் செய்தவர்கள்

1. ராம. சேதுராக்கி சேர்வை அவர்கள்
2. சொ. முத்தையா அம்பலம்
3. மு. சொ. சிதம்பரம் அம்பலம்
4. சே.ராம. வடமலைசேர்வை
5. மு. சொ. சித. சோலைமலை அம்பலம்
6. மு. பொன்னம்பலம் அம்பலம்
7. பூ. பெரி. சிதம்பரம் அம்பலம்
8. பூ. பெரி. பெரியகருப்பன் அம்பலம்
9. சொ. கு. வெள்ளையனம்பலம்
10. சொ. கு. பெரியய்யா அம்பலம்
11. மு. பழ. சோலையன் அம்பலம்
12. மா. சித. ராமசாமி சேர்வை
13. ஆ.சி. ராமசாமி அம்பலம்
14. மா. ச. மு. சோலையன் சேர்வை
15. மு. சி. குமரப்பன் அம்பலம்
16. சே. ராம. அழகர் சேர்வை
17. ராம. சோ. பெரியணன் சேர்வை
18. பி. ராம. ராமசாமி அம்பலம்
19. சே. ராம. ராமசாமி சேர்வை
20. ஆ.சி. ராமசாமி அம்பலம்
21. பூ. சோ. சோலையன் அம்பலம்
22. பூ. சித. பெரியகருப்பன் அம்பலம்

---

## 1948 முதல் 1970 வரை அருள்மிகு சோலைவளர்த்த அய்யனார் திருக்கோவில் அறங்காவலராக நிர்வாகம் செய்தவர்கள்

1. சி. அழ. சின்னக்கருப்பனம்பலம்
2. சுப. பெரியய்யா அம்பலம்
3. மா. சோ. சிவானந்தம் சேர்வை
4. கு.ராம. சோலையன் அம்பலம்
5. சொ. சோ. நடேசன் அம்பலம்
6. வ. சொ. கண. ராமசாமிசேர்வை
7. சொ. கு. பெரி. குமரப்பனம்பலம்
8. கு. கரு. சோலையன் அம்பலம்
9. பூ. சித. ராமசாமி அம்பலம்
10. கண. ராமசாமி சேர்வை
11. மா.பெரி. வீரப்பன் சேர்வை
12. கா. சுப. பெரியய்யா அம்பலம்
13. பூ.கரு.பெரி. பெரியணன் அம்பலம்

## 1971 முதல் 2005

## கொத்தரி ஸ்ரீ அருள்மிகு சோலைவளர்த்த அய்யனார் திருக்கோவில் அறங்காவலராக நிர்வாகம் செய்தவர்கள்

1. கண. இராமசாமி சேர்வை
2. பி. சோ. சோலைமலை அம்பலம்
3. கா. பெரி. சிதம்பரம் அம்பலம்
4. பூ. சித. இராமசாமி அம்பலம்

1. கரு. சோ. வெள்ளச்சாமி அம்பலம்
2. பி. சோ. சோலைமலை அம்பலம்
3. கா.பெரி. சிதம்பரம் அம்பலம்
4. பூ. சுப்பையா அம்பலம்

1. கு. ராம. சோ. கருப்பையா அம்பலம்
2. பி. சோ. சோலைமலை அம்பலம்
3. கா. பெரி. சிதம்பரம் அம்பலம்
4. பூ. பெரி. சுப்பையா அம்பலம்

---

## கொத்தரி நாட்டார் 1971 முதல் 2005 வருடம் நிர்வாக டிரஸ்ட்டிகள்

1. கண. ராமசாமி சேர்வை
2. பெரி. வீரப்பன் சேர்வை

1. கும. சபாபதி அம்பலம்
2. கரு. பெருமாள் அம்பலம்

1. மு.பழ. சோ. கருப்பையா அம்பலம்
2. பி. சோ. சோலைமலை அம்பலம்

1. சோ. கும. சோலையன் அம்பலம்
2. கரு. பெருமாள் அம்பலம்

1. கும. காளிமுத்தன் அம்பலம்
2. வீர. சோலையன் சேர்வை

1. பூ. ராம. கிருஷ்ணன் அம்பலம்
2. கரு. பெருமாள் அம்பலம்.

# வாழ்த்துரை



**பழ. படிக்காசு**

தலைவர் தமிழ்நாடு வல்லம்பர் சங்கம்

"ஆலயம் தொழுவது சாலவும் நன்று," கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்பன போன்ற ஆன்றோர் முதுமொழிகள் அறிந்து கொள்ளவேண்டிய அறிவுரைகள். ஆன்மாலயிக்குமிடம், ஆலயம். அப்படிப்பட்ட ஆலயம் சோலைகள் சூழ வாவிகள் வலமாக அமைய அழகிய சூழலில் அமைந்துவிட்டால் ஆனந்தத்திற்கு அளவே இல்லை. இப்படிப்பட்ட இயற்கை வளத்தோடு அருள்மிகு ஸ்ரீ சோலைவளர்ந்த அய்யனார் பல பரிவார தெய்வங்களோடு கொத்தரியில் கோயில் கொண்டு, கொலுவீற்று நாட்டார், நகரத்தார் நலம் நாடிவரும் அடியார் ஆகிய அனைவருக்கும் அருள் பாலித்து வருகிறார்.

கொத்தரி நான்குகரை வல்லம்பர்கள் நிர்வாகத்தில் மிகச் சிறப்பாக பராமரிக்கப்பட்டு தரிசனத்திற்கு வரும் அனைத்து அடியார்களுக்கும் சகல சௌகரியங்களும் செய்து வைத்திருக்கிறார்கள். தங்களது பிரார்த்தனைக்காக பலநாள்தங்கி, விடியலில் சிவகங்கைத் தீர்த்தமாடி மூலிகை காற்றை சுவாசித்து, முன்னைவினையகல மூலப் பரம் பொருளாம் ஸ்ரீ சோலை ஆண்டவரை தரிசித்து இன்புற எல்லா வசதிகளும் திருமடமும், கோசாலையும் இங்கே அமைத்திருக்கிறார்கள். இத்துனை சிறப்புக்கள் பெற்ற இவ்வாலயக் குடமுழுக்கு விழா இன்று வெகுவிமரிசையாக நடந்தேறியுள்ளது விழாவிற்கு பெரிதும் நன்கொடை வழங்கி உதவிய புரவலர்களையும் ஆன்மிக அன்பர்கள் அடியார்களையும், தொண்டுள்ளத்தோடு சேவையாற்றி இங்நிகழ்ச்சியை சிறப்புரச் செய்த கொத்தரி நான்கு கரை வல்லம்பர் பெருமக்களையும் வாழ்த்திப் பாராட்டி. அருள்மிகு சோலைவளர்த்த அய்யனார் அனைவருக்கும் திருவருள் புரிய வேண்டுகிறேன்.

அன்பன்

பழ. படிக்காசு

அருள்மிகு ஸ்ரீ பாலவிளத்த அய்யனார் துணை

# தோரணவாயில்

சண்முகக் கவிமணி

**சோலை. இராமச்சந்திரன்**

அனைத்து அடியார் பெருமக்களையும், பக்தகோடிகளையும் வணங்கி மகிழ்கிறேன். அவனருளாலே அவன் தாள் வணங்கி, அவனிட்டபணியாய், அருள்மிகு ஸ்ரீ சோலையாண்டவர் ஆலயத் திருக்குடமுழுக்கு விழாச் சிறப்பு மலர்த் தொகுப்புப் பணியில் என்னையும் இணைத்துக் கொண்டமைக்கு பெரிதும் மகிழ்கிறேன்.

அருள்மிகு ஸ்ரீ சோலை ஆண்டவர் அருளாசியை அவர் அருள் பாலிப்பதை அறியாதவர் இல்லை. எந்தவொரு அய்யன் பதிக்கும் இல்லாத சிறப்பும், அருள் வளமும். கொத்தரி ஸ்ரீ சோலைஆண்டவர் திருக்கோயிலுக்கு அமைந்துள்ள காரணத்தால் சுற்று வட்டாரத்தில் ஐம்பது கிலோ மீட்டர் தொலைவில் இருந்து கூட அடியார்கள். வேண்டுதல்கள், காணிக்கைகளை செலுத்துவது கண்கூடு. இச்சிறப்புக்கு, தலவிசேடம், மூர்த்தி விசேடம். தீர்த்த விசேடம், எனும் முச்சிறப்பும் ஒருங்கே அமையப் பெற்றது இவ்வாலயம்.

சித்திவிநாயகர் சந்நிதியில் தொடங்கி, இடப்புறமாகச் சென்று வில்வமரத்தை தரிசித்து. மேற்கே சென்று முனீஸ்வரர் சந்நிதியில் நின்று வடக்கு வலமாகச், சப்த கன்னியர் அடைக்கலங்காத்தாரை வணங்கி இடதுபுறம் உள்வாங்கி மூலவர் திருச்சந்நதி முன் நின்று வணங்கி பின் கிழக்கு நோக்கிச் சென்று பதினெட்டாம்படிக் கருப்பரை வணங்கி வலமாகவந்து காளியம்மனைச் சுற்றிக் கொண்டு சந்நதியில் நின்றால் **ஓம்** என்ற எழுத்து வடிவத்தில் நமது தரிசனவலம் அமைந்திருப்பதை நாம் உணர முடியும். திருச்செந்தூர் முருகன் ஆலயத்தை தவிர இந்தச் சிறப்பு வேறெந்த அய்யன் பதிக்கும் இல்லை. சிவகங்கைத் தீர்த்தச் சிறப்பும் அய்யனின் மூர்த்திச்சிறப்பும், ஓங்காரவடிவான தலச்சிறப்பும், தலவிருட்சமான பாலமரத்தின் சிறப்பும் ஒருங்கே அமையப் பெற்ற அற்புதத் திருத்தலம் கொத்தரி ஸ்ரீ சோலையாண்டவர் திருக்கோயில். பல இயற்கை மூலிகைகள் நிறைந்த சுற்று வளாகம் ஓர் சித்தி வளாகமாகச் சித்தர்கள் சிலர் வாசம் செய்து அருள் பாலிக்கும் ஐவகைச் சிறப்புக்கள் பெற்ற இத்திருத்தலம், பஞ்சேந்திரிய பாவங்களையும் சஞ்சித பாவவினைகளையும் தகர்த்து, அருள்பாலித்து அரசாட்சி செய்து கொண்டிருக்கும்

*அருள்மிகு ஸ்ரீ சோலை ஆண்டவன் திருவடிகளை பணிந்து போற்றி*
*பலன் பெறுவோம் வாரீர் வாரீர் என அழைத்து*

**இம்மலரைச் சமர்ப்பணம் செய்கிறோம்.**

# அணிந்துரை



டாக்டர் பேராசிரியர் அய்க்கண் M.A.,B.T.,D.Litt.,

செயலாளர் – தமிழ்நாடு வல்லம்பர் சங்கம்

## சொல்லரிய பேரருள் சோலையாண்டவர்...

'கொத்தரி அருள்மிகு சோலையாண்டவர் திருக்கோயில் குடமுழுக்கு நீராட்டு விழா மலருக்கு அய்க்கண் ஒரு கட்டுரை எழுதித்தர வேண்டும். இரண்டு நாட்களுக்குள் வேண்டும்; அவசரம்' என்று அன்புக் கட்டளையிட்டுச் சென்றிருக்கிறார்கள் நண்பர் திரு. சோ. இராமச்சந்திரனும் கவிஞர் சோலை. இராமச்சந்திரனும்.

நான் திகைத்துப் போய் உட்கார்ந்தேன். பாலைய நாட்டின் பழம்பெரும் அருட்கடலாய் கருணைத் தெய்வமாய் பைம்புனல் சூழ் பூஞ்சோலை படர் நிழலின் கொத்தரித் திருநகரின் கண் எழுந்தருளி அருள்பாலிக்கும் தமிழ்க்கடவுள் சோலையாண்டவரின் தண்ணளிபற்றி இரண்டு நாட்களுக்குள் கட்டுரை எழுதியனுப்ப இயலுமா? பௌராணிகர்கள் சொல்வதுபோல் 'ஆயிரம் நாவு படைத்த ஆதிசேஷனாலும் ஆகாத' செயல் அன்றோ அது?

பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து ஊனுடை உயிர்களுக்கெல்லாம் அன்பினை ஊட்டும் அருள்நிறை சோலையாண்டவர் திருத்தலம், குடிகொண்டகோயில் சிறப்பு, திருவருள் நிகழ்வுகள் குறித்த 'ஸ்தல புராணச் செய்திகளைச் சான்றோர் பெருமக்கள் முன்னதாகவே வழங்கியிருப்பர் என்பதால், எளியேனின் சுயானுபவங்களை உங்களுடன் பகிர்ந்து கொள்ள எண்ணுகிறேன்....

என் நெஞ்சுக்குள் ஆயிரமாயிரம் இளைய நினைவுகள், சாரிசாரியாக நடையிட்டு வருகின்றன - பல்வேறு சாலைகளிலிருந்தும் கொத்தரிச் சோலையை நோக்கி நடக்கும் ஆயிரக்கணக்கான பக்தர்களின் வரிசையைப் போல... ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐம்பதுகளில் – நானும் அந்த நெரிசற்கூட்டத்தில் ஒருவனாக ... என் ஆத்தாளின் ஒரு கையையும் சின்னாத்தாளின் ஒரு கையையும் பிடித்துக் கொண்ட சிறுவனாக ... அந்தத் திருத்தலத்தை நோக்கி வாரந்தோறும் புனிதப்பயணம் மேற்கொண்டு நடந்த பிஞ்சு நினைவுகள்....

இந்தத் தலைமுறையில், சபரிமலை, பழநிமலை, வைத்தீஸ்வரன் கோயில்களுக்கு நடந்துசெல்லும் பக்தர்களின் எண்ணிக்கையைப் பார்த்துப் பிரமிக்கிறோமே அன்று ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர், கொத்தரிச் சோலைத் திருப்பதியை நோக்கி நடந்த பக்தர்களின் பரிமாணத்தை நினைத்துப் பார்த்து இப்போதும் பிரமிக்கிறேன்.

ஆண்களும் பெண்களுமாய், பெரியவர்களும் சிறியவர்களுமாய் அதிகாலைப் புலர்போதில் கொத்தரிச்சாலையில் பாதை பூராவையும் அடைத்துக்கொண்டு, பக்தர்கள் 'சோலையாண்டவா! சோலையாண்டவா!' என்று வாய்மணக்க முழங்கிக்கொண்டு

நடந்த திருக்கூட்டத்தில், நானும் ஒருவனாக வாரந்தோறும் நடந்து சென்று வழிபட்ட நினைவுத் தடங்கள், மீண்டும் என் மனத்திரையில் மறு ஒளித்தொடராக மின்னி நகர்கின்றன...

'ALL ROADS LEAD TO ROME' என்பது ஐரோப்பியப் பழமொழி. எல்லாச் சாலைகளும் கொத்தரியை நோக்கி நகரும் என்பது இற்றைய இறைமொழி....

**மாசில் வீணையும் மாலை மதியமும்**
**வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்**
**மூசு வண்டறைப் பொய்கையும் போன்றதே**
**ஈசன் எந்தை இணையடி நீழலே**

என்று அப்பர்பெருமான் மனம் கசிந்து பாடினாரே - அந்த மூசுவண்டறைப் பொய்கையாய்க் காட்சியளிக்கும் திருக்குளத்தில் நீராடிய நினைவுகள்...

**பொய்யார் தடம் பொய்கை புக்கு முகேரென்னக்**
**கையால் குடைந்து குடைந்து உன் கழல் பாடி**
**ஐயா வழியடியோம் வாழ்ந்தோம் காண் ஆரழல்போல்**
**செய்யா வெண்ணீறாடி செல்வா சிறுமருங்குல்**
**மையார் தடங்கண் மடந்தை மணவாளா**
**ஐயா நீ ஆட்கொண்டு அருளும் விளையாட்டின்**
**உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம்**
**எய்யாமல் காப்பாய் எமை.**

என்னும் மணிவாசகப் பெருமான் காட்டிய வழியில், புனித தீர்த்தம் திரண்டுள்ள பொய்கை நீரில், விடிகாலைப் போதில் மலர்ந்து மணக்கும் குளிர் தென்றலில், பொங்கப் பொங்க நீராடி, ஈர உடையுடனே கரையேறி, சுற்றுப்பரிவாரத் தெய்வங்களை வலம் வந்து வணங்கி, தெய்வக் கருணை பொழியும் சோலையாண்டவர் திருவருட் சந்நிதியில் நின்று வழிபட்ட பிறகு, சுற்றுப் பிரகாரத்தின் ஓரத்தில் வரிசையாக அமைந்துள்ள பிரார்த்தனைக் கல்லிலே என் இளைய கைகளை வைத்து, என் எதிர்காலத்தைக் கணித்தறிய என் தாயும் சிற்றன்னையும் செய்த தோத்திரங்கள் இன்னும் என் நினைவில் எதிரொலியாகத் தொனிக்கின்றன....

அந்த நினைவுகளின் பசுமை இப்போது என் நினைவில் துளிர்க்கின்றன....

அன்று - பசுமையே இல்லாத பாலையாக - பொருளாதாரத்திலும் வசதியிலும் வறுமைக் கோட்டுக்குக் கீழே - கீழே என்ன, அதலபாதாளத்தில், கிடந்த எனக்கு, எதிர் காலத்தில் ஏதாவது ஏற்றம் புலருமா என்ற ஆதங்கம், அந்தத் தாயுள்ளங்களுக்கு ...

வட்டமான அந்தப் பிரார்த்தனைக் கல்லின் மேற்பகுதியில் என் இருகைகளின் பெருவிரல்களையும் ஒன்றுசேர்த்து வைத்துக் கொண்டு, இறைவன் திருவடிகளில் மானசீகமாக என் பிரார்த்தனைகளை மலர் அர்ச்சனையாகத் தூவிக் கொண்டு அமைதியாக உட்கார்ந்திருப்பேன்.

இரண்டு பெருவிரல்களும் இருபுறமும் மெல்ல, மெல்ல, நகர்ந்து நகர்ந்து, இரண்டு சுட்டு விரல்களும் இறுதியில் ஒன்றையொன்று சேர்ந்துவிட்டால் - எல்லாவளமும் நலமும் சேர்ந்த எதிர்காலம் தன் மகனுக்குக் கிட்டும் என்ற நம்பிக்கையில் அவர்கள் இருவரும், கண் இமைக்காமல் என் கைவிரல்களின் அசைவைப் பார்த்தபடி பக்கத்தில் நின்று கொண்டிருந்த பாசக்காட்சி, இப்போதும் என் விழிகளில் பசுமையான ஈரமாகக் கசிகிறது....

அருள்மிகு சோலையாண்டவர் திருக்கோயில் வளாகத்தில் கணிக்கப்பெற்ற என் எதிர் காலம், ஒளிமிக்கதாகவே விடிந்திருக்கிறது என்ற மனநிறைவு, என் அன்னையரின் நல்லான்மாக்களை மகிழ்வித்திருக்கிறது என்பதை நான் பூரணமாக உணர்கிறேன்...

இதே காட்சியை, அண்மையில் நான் கதை, திரைக்கரை, வசனம் எழுதி ஒளிபரப்பான ஒரு தொலைக்காட்சித் தொடரில் இணைத்து விளக்கம் சொல்லிப் படம் பிடித்தபோது, இயக்குநரும் ஒளிப்பதிவாளரும் கதாநாயகியும் உணர்வு பூர்வமாக உளம் நெகிழ்ந்த நிகழ்ச்சி, இப்போது என் நெஞ்சுக்குள் தொடர்காட்சியாக விரிகிறது....

எனக்கு மட்டுமல்ல இன்னும் எண்ணற்ற ஆயிரக்கணக்கான பக்தர்களின் எதிர்கால வாழ்வு பொருளும் அறிவும் வளமும் பொங்கிச் செழிக்க, பூ மலரும் பொழில் சூழ்ந்த சோலை வாழ் ஆண்டவரின் இன்னருள் இயைந்திருப்பதை நான் அறிவேன்.

தமிழகத்தின் பல்பேறு பகுதிகளிலிருந்தும், புகழும் வளமும் செல்வாக்கும் நிறைந்த பெருமக்கள் பலர், கொத்தரித்திருத்தலத்திற்குப் பயணம் வந்து வழிபட்டு, நேர்த்திக்கடனும் நன்றிக்கடனும் ஆற்றும் தூய காட்சிகளைக் கண்ணாரச் கண்டு பெருமைப்பட்டிருக்கிறேன்.

இன்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் வள நலம் வழங்கும் அருள்மிகு சோலையாண்டவர் திருக்கோயிலுக்குக் குட நீராட்டு விழா செய்விக்கும் கொத்தரி நாட்டார் பெருமக்களுக்கு என் மனமார்ந்த பாராட்டுகளையும் வாழ்த்துகளையும் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இற்றைத் தலைமுறையின் ஆன்மீக உணர்வும் பொருளாதார முயற்சிகளும் சமுதாய உந்துதலும் வழிகாட்ட, பல்லாற்றானும் முன்னேற்றம் கண்டுவரும் வல்லம்பர் சமுதாயத்தின் மற்றொரு வரலாற்று நிகழ்வாக இந்த விழா சிறப்புப் பெறும் என்ற உறுதி எனக்குள் ஆழமாகப் பதிந்து ஒளிர்கிறது.

> பழையன கழிதலும் புதியன புகுதலும்
> வழுவல : கால வகையினானே

என்ற கோட்பாட்டிற்கேற்ப, பயனற்ற பழைமைகளைக் களைந்தெறிந்து பயனுள்ள புதுமைகளை மேற்கொண்டு, முன்னிலை நோக்கிப் பீடு நடைபோட்டு முன்னேறும் சமுதாயத்தின் முயற்சிகளுக்குக் கால்கோள் காணும் நாட்டார் பெருமக்களின் நல்லுள்ளங்களை வாழ்த்தி மகிழ்கிறேன்.

- அய்க்கண்



அன்புடையீர் வணக்கம்!

பலநூறு ஆண்டுகள் பாரம்பரியம் மிக்க கொத்தரி

**அருள்மிகு சோலைவளர்த்த அய்யனார் திருக்கோயில்**

மகா கும்பாபிஷேகம் நடைபெறுவது அறிந்து மிக்க மகிழ்ச்சியுற்றேன்.

கொத்தரி நான்குகரை வல்லம்பர்களின் நிர்வாகத்தின் விடா முயற்சியாலும், ஒத்துழைப்போடும் 23-23-2005 அன்று கும்பாபிஷேகம் சிறப்பாக நடைபெற எனது வாழ்த்துக்களையும், பாராட்டுக்களையும் தங்களுக்கு பணிவுடன் தெரிவித்துக்கொள்கின்றேன்

**சுப. துரைராஜ்** D.E.E., Ex.M.L.A.,
5, சுப்பையா அம்பலம் சாலை
கண்ணதாசன் நகர்
காரைக்குடி -3

## அருள்மிகு சோலை வளர்த்த அய்யனார் திருக்கோயில்
## மகா கும்பாபிஷேக குழுவினர்.

குமு. சோலை அழகர் அம்பலம் – தலைவர்

1. பழ. சோ. கருப்பையா அம்பலம்
2. சோ. ராமச்சந்திரன் சேர்வை
3. கு. ராம. சோ. கருப்பையா அம்பலம்
4. மரு. சோ. சின்னத்தம்பி அம்பலம்
5. பி.சோ. சோலைமலை அம்பலம்
6. மா.வீர. முத்துக்கிருஷ்ணன் அம்பலம்
7. சொ.கு. பெரி. குமரப்பன் அம்பலம்
8. கா.பெரி. சிதம்பரம் அம்பலம்
9. ம.கரு. பெருமாள் அம்பலம்
10. குமு. சபாபதி அம்பலம்
11. பூ. பெரி. சுப்பையா அம்பலம்
12. பூ. சித. ராம. கிருஷ்ணன் அம்பலம்





அன்புடையீர் வணக்கம்!

பலநூறு ஆண்டுகள் பாரம்பரியம் மிக்க கொத்தரி

**அருள்மிகு சோலைவளர்த்த அய்யனார் திருக்கோயில்**

மகா கும்பாபிஷேகம் நடைபெறுவது அறிந்து மிக்க மகிழ்ச்சியுற்றேன்.

கொத்தரி நான்குகரை வல்லம்பர்களின் நிர்வாகத்தின் விடா முயற்சியாலும், ஒத்துழைப்போடும் 23-23-2005 அன்று கும்பாபிஷேகம் சிறப்பாக நடைபெற எனது வாழ்த்துக்களையும், பாராட்டுக்களையும் தங்களுக்கு பணிவுடன் தெரிவித்துக்கொள்கின்றேன்

**சுப. துரைராஜ்** D.E.E., Ex.M.L.A.,
5, சுப்பையா அம்பலம் சாலை
கண்ணதாசன் நகர்
காரைக்குடி -3

## அருள்மிகு சோலை வளர்த்த அய்யனார் திருக்கோயில் மகா கும்பாபிஷேக குழுவினர்.

குமர. சோலை அழகர் அம்பலம் – தலைவர்

1. பழ. சோ. கருப்பையா அம்பலம்
2. சோ. ராமச்சந்திரன் சேர்வை
3. கு. ராம. சோ. கருப்பையா அம்பலம்
4. மா. சோ. சிவானந்தம் சேர்வை
5. பி.சோ. சோலைமலை அம்பலம்
6. மா.வீர. முத்துக்கிருஷ்ணன் அம்பலம்
7. சொ.கு. பெரி. குமரப்பன் அம்பலம்
8. கா.பெரி. சிதம்பரம் அம்பலம்
9. ம.கரு. பெருமாள் அம்பலம்
10. குமர. சபாபதி அம்பலம்
11. பூ. பெரி. சுப்பையா அம்பலம்
12. பூ. சித. ராம. கிருஷ்ணன் அம்பலம்





# கொத்தரி அருள்மிகு ஸ்ரீ சோலைவளர்த்த அய்யனார் திருக்கோயில் தல வரலாறு

சிவகங்கை மாவட்டம், காரைக்குடி வட்டம், பள்ளத்தூர் - கொத்தரி கிராமம். அருள்மிகு ஸ்ரீ சோலை ஆண்டவர் கோயில் இருக்குமிடம்.

1. பள்ளத்தூர் பேருந்து நிலையத்தில் இருந்து மேற்கே 1.5 கி.மீ.
2. செட்டிநாடு தொடர்வண்டி நிலையத்திலிருந்து கிழக்கே 1.5 கி.மீ.
3. காரைக்குடியில் இருந்து வடக்கே 10 கி.மீ.
4. பிள்ளையார் பட்டியிலிருந்து கிழக்கே 14 கி.மீ.

கருணைமிகு சிவகங்கை கரையமர்ந்து ஆட்கொண்ட கணநாதா தருணமிது உனை வணங்கிச் சோலையாண்டவர் கோயில் தலவரலாறு சொல்ல, அருள்புரிந்து சிந்தையிலே, உண்மையே சேர, அல்லவை அகல, மறையவனே! நின் பொற்பாதந்தாள் சரண். **- கவிஞர் மு. பொன்னம்பலம் அம்பலம்**

அதிசயம் தந்திடும் அற்புதக் திருக் கோயில்<br>
அகிலம் தழைக்க அவதரித்த திருக் கோயில்<br>
அய்யனார் கோயிலென அழைக்கும் திருக் கோயில்<br>
அன்பர்கட்கு நலமெலாம் அளிக்கும் திருக் கோயில்

அத்திருக்கோயில் அருள்மிகு சோலை வளர்த்த அய்யனார் திருக்கோயில். சோலை வளர்த்துச் சுகம் தரும் வசந்தத்தை ஆக்கியதால் சோலைவளர்த்த அய்யனார் என்றும் சோலையாண்டவர் என்றும் அழைக்கப் பெறுகிறார்.

முன்னைப் பழமைக்கும், பின்னைப் புதுமைக்கும் பெற்றியதாய் விளங்குவதே இத்திருக்கோயில்.

எண்ணிலா மக்கள் இவரை எண்ணித் துதித்து எண்ணிய வண்ணம் எய்தி இன்பம் பெற்றுள்ளார்கள். அவர்கள் பெற்ற அருள் இன்பமதை நாமும் பெறுவது நம் கடமையாகும்.

வேலை எதுவாயினும் சோலை ஆண்டவரை
வேண்டி நாளும் வணங்குவதை
வேலை யெனக் கொண்டே நின்றால்
விளையும் நன்மைகள் விழைந்து!

## தொன்மையும், தோற்றமும் நிர்வாகமும்

தொன்மை மிக்க பழங்கோயிலே இத்திருக்கோயில் இதனை நிர்வகித்து வருபவர்கள் கொத்தரி பரம்பரை நான்குகரை வல்லம்பர்கள் ஆவார்கள். நரியன் கரை, புலியன் கரை, பாண்டியன் கரை, சோழன் கரை என்பது அந்த நான்கு கரைப் பெயர்களாகும்.

ஏறத்தாழ பல ஆண்டுகளுக்கு முன் மகாராஜ ஸ்ரீ திரிபுவன சக்கரவர்த்தி காலத்தில் சிவகங்கை சமஸ்தானம் மூலம் இனாம் சாசனம் வழங்கப்பட்டது. நரியன் கரையைச் சேர்ந்தவர்கள் சேனாதிபதியாகவும், புலியன் கரை, பாண்டியன் கரை, சோழன் கரையைச் சேர்ந்தவர்கள் சேர்வை, அம்பலக்காரர்களாகச் சேவை பார்த்தார்கள். செய்யும் தொழிலே சிறப்பு எனச் சேவை புரிந்தமையால் பாராட்டுப் பெற்றார்கள்.

மன்னர்களுக்குச் சேவை செய்த சிறப்புக் காரணமாக நான்கு கரை வல்லம்பர்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க இவர்களால் நிர்மாணிக்கப் பெற்ற இக்கோயிலுக்கு, கோயிலைச் சுற்றியுள்ள நன்செய், புன்செய் நிலங்களைச் ராமநாதபுரம் ராஜா சிவகங்கை சமஸ்தானம் மூலம் 11ம் பசலி முதல் 1413ம் வருடங்களுக்கு முன்பு மகாராஜ ஸ்ரீ திரிபுவன சக்கரவர்த்தி காலத்தில் கொத்தரிக் கிராமத்தின் உட்கடையாக குரும்பி ஏந்தல் என்ற இனாம் கிராமமாக மேலே கண்ட அருள்மிகு ஸ்ரீ சோலைவளர்த்த அய்யனார் கோயில் நிர்வாகத்திற்கு வழங்கப் பெற்றது. பின்னர் இந்திய ஜனநாயகக் குடியரசும் சென்னை உயர்நீதிமன்றமும் மேற்படி சமுதாய நிர்வாகத்திடம் இனாம் சாசனத்தை உறுதிப்படுத்தி முற்காலம் முதல் நிர்வகித்து வருகிறார்கள்.

நான்கு கரை வல்லம்பர்கள் நாட்டார் பேரவை கூடி நான்கு கரை சமுதாயத்திற்குள் நான்கு அறங்காவலர்களை கரைக்கு ஒருவராகத் தேர்ந்தெடுத்து அதில் முறையே ஒருவரை நிர்வாக அறங்காவலராகவும் மற்றையோர் அறங்காவலர்களாகவும் பார்த்து வருவதும் நிர்ணயிக்கப்பட்ட காலம் வரை பார்ப்பதும், மகாசபை விரும்பினால் தொடர்ந்து பார்க்கச் செய்வதும் தொன்று தொட்ட பழக்கமாக இன்றுவரை நடைமுறையில் இருந்து வருவதை அரசு அறநிலைய ஆட்சித் துறை மேற்படி நிர்வாகத்தை உறுதிப்படுத்தி ஆணை வழங்கி உள்ளது.

### தனிப்பெரும் சிறப்பு :

இக்கோயில் மூலவர் வலது காலை மட்டும் வைத்திருக்கும் மாற்றம் தவிர மற்றைய அனைத்திலும் ஐயப்பன் போலவே காட்சி தருகிறார்.

இக்கோயில் தலம் ஏறத்தாழ 200 ஏக்கரில் பலவகை மூலிகை சோலைக் காடுகளுக்கு மையமாக அமைந்துள்ளது. சோலை சூழந்த அமைப்பின் காரணமாகத்தான் சோலைவளர்த்த அய்யனார் ஆலயத்தை மக்கள் ஊரையும் இணைத்து கொத்தரி சோலையாண்டவர் கோயில் என்று அழைத்து வருகின்றனர்.

### புண்ணியத் தீர்த்தம் :

இவ்வாலயத்தில், வலதுபக்கம் தெற்கில் சிவகங்கை என்னும் புண்ணியத் தீர்த்தக் குளம் ஒன்று உள்ளது. சுருக்கமாக சேங்கை என்று இப்போது அழைக்கின்றார்கள். மூலிகைகளைத் தாங்கிவரும் நீரைத் தன்னகத்தே கொண்டிருப்பதால் இக்குளத்திற்கு நோய் தீர்க்கும் தகுதி உள்ளது. கோயில் பூஜை செய்பவர்கள் ஸ்நானம் செய்தும், வழிபாட்டிற்கு வரும் பக்தர்கள் தீர்த்தமாடியும் அல்லது தீர்த்தத்தைத் தலையில் தெளித்தும் ஆலய வணக்கத்திற்கு செல்வதே பழக்கத்தில் உள்ளது.

### தல விருட்சமும் - தண்ணருள் காட்சியும் :

இத்திருத்தலத்தில் அமைந்துள்ள தலவிருட்சம் பாலமரம் ஆகும். பல ஆண்டுகட்கு முன்பு தோன்றி ஆலமரம் போல் பரந்து அருள் நிழல் தந்து கொண்டிருக்கிறது. எல்லாப் பாலமரமும் பூத்து, கனி தந்து நிற்கும். ஆனால், இம்மரத்தின் அதிசயம் அந்நாள் தொடங்கி இந்நாள் வரை பூப்பூத்து உதிர்ந்து விடுகிறது. மரம் விரிந்து படர்ந்து மனதிற்கு மகிழ்ச்சியைத் தந்து கொண்டிருக்கிறது.

ஆண்டவரைத் தரிசித்த பின் வேண்டுவோர் வேண்டியாங்கு எய்த வேண்டுமெனில் அம்மரத்தின் நிழலில் அமர்ந்து மனதில் நினைத்தால் எண்ணிய வண்ணம் முடியும்.

பால மர நிழலில் அமர்ந்து இருந்தே
பக்குவமாய் நலம் பெற மனதுள் நினைந்தேன்
பல்வளமும் நலமும் பாங்குற எய்தினேன்
பாலொடு பழமாய் பயனேதந்த
சோலையாண்டவர் அவரின் பாதமதை
பணிந்தேன், நீரும் பணிவீர் இங்கு

என்று பயன் பெற்றோர் பலரும் அனுபூதியாய்ப் பாடிடும் அதிசயம் உண்டு இங்கே!

## பரிவார தேவதைகள் :

மூலவரின் முதல் சன்னதி பரிவார தேவதையாக அருள்மிகு பதினெட்டாம்படிக் கருப்பரும், ஆண்டவருக்கு அடுத்து அருளாசி வழங்கும் சந்நிதி பாத பெரியகருப்பரும், அடுத்து சன்னாசி மண்டபத்தில் அமர்ந்து அருளாசி வழங்கும் அருள்மிகு சன்னாசி, களிக்காரி, தட்சிணாமூர்த்தி, அகோர வீபத்திரர், பெரிய கருப்பர், சின்னக் கருப்பர், பட்டவர் என எழுவர்களும், அடுத்து வேண்டுவோர்க்கு வேண்டும் வரம் தந்திடும் அருள்மிகு பிரம்மர் சுவாமிகளும், சேங்கை கரையமர்ந்த சித்தி விநாயகரும், சக்திமரம் வில்வ மேடையும், பெயர் சொல்லி அழைத்தாலே பில்லி, சூனியம் விலகிடும், அருள்மிகு முனீஸ்வரரும், தஞ்சமென்ற அடியாரைத் தவறாமல் காத்திடும் ஸ்ரீ அடைக்கலம் காத்த அய்யனார் - சப்தகன்னியர் சுவாமிகளும், தர்மம் காக்கும் காவல் தெய்வம் ஸ்ரீ காளியம்மனும், அடைக்கலம் புகுந்த சாத்தப்பையாவும், வழிவிடும் கஜேந்திரரும், பாவம் தீர்க்கும் பலிபீடமும் பரிவார தேவதைகளாக மூலவரைச் சுற்றி கோயில் கொண்டு அருள் பாலிக்கின்றனர்.

## பூஜையும் பூஜகர்களும் :

இறைவன் திருமேனி தொட்டு இன்னருள் பாலிக்க பூஜை செய்பவர்கள் குலாளர் வகுப்பைச் சார்ந்தவர்களும் பூஜைக்கு உதவியாளர்களாக இருப்பவர்கள் பரிசாரகர்கள் என்ற இசை வேலாளர்களும் ஊழியம் பெற்று உன்னதமாகப் பணிபுரிகிறார்கள்.

சொற்றமிழ் பாடுக என்றான் தூய்மறை பாடும் வாயால் என்று வேதம் பாடும் திருவாயால் தமிழ் பாடுகஎனக் கேட்ட இறைவனின் விருப்பப்படி இவர்கள் இங்கு பக்தர்கட்கு தமிழிலும், சமஸ்கிருதத்திலும் அர்ச்சனை செய்து பிரசாதங்கள் வழங்குகிறார்கள். முறைப்படி செய்யும் இருகாலப் பூஜைகளில் (உச்சிக்காலம் - சாயங்காலம்) அபிஷேகங்களை, படித்தர நிவேத்தியங்களும், அலங்காரமும், தீப ஆராதனைகளும் செய்து பக்தர்களின் மனம் மகிழ வழிபாட்டிற்குத் துணை செய்கிறார்கள்.

மார்கழி மாதத்தில் மூன்று கால பூஜை (அதிகால பூஜை, உச்சிக்கால பூஜை, சாயங்கால பூஜை) நடைபெறுகிறது. சோலை வளர்த்த அய்யனார் ஆலயத்தின் நிர்வாகத்துக்குட்பட்ட கொத்தரியில் இருந்து வரும் வழியில் உள்ள அருள்மிகு வெற்றி விநாயகர் கோயிலுக்கும், அருள்மிகு அழகியநாச்சியம்மன் கோயிலுக்கும், வழிமுறை பூஜைகள் பூஜகர் பண்டாரமும், பட்டர்களும் ஊழியம் பெற்று நல்ல முறையில் நடைபெறுகின்றன. புகழ்மிக்க ஆலயங்களில் உள்ள பழக்கத்தைப் போல் இவ்வாலயங்களில்.

வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைந்தேலோ ரெம்பாவாய் என்ற திருப்பாவையும்.
ஆதியும், அந்தமும் இல்லா அரும் பெருஞ்
சோதியை யாம்பாட

திருவெண்பாவையும் இசையுடன் பாடப் படுகிறது. பாமாலையும், பூமாலையும் சூட்டப்பெறுகிறது.

ஏனைய கோயில்களைக் காட்டிலும் ஏற்றமுயர் சிறப்பபொன்று இக்கோயிலுக்கு உண்டு. இல்லற வாழ்க்கை நடத்தும் குடும்பங்கள் இத்திருக்கோயிலின் சுமார் 7 கிலோ மீட்டர் சுற்றளவில் வசிப்பது வழக்கமில்லை. அதேபோல் பூஜகர்களும், பரிசாரர்களும், மற்றைய ஊழியர்களும் இக்கோயில் தலத்துக்குள் குடும்பத்துடன் வசிப்பதில்லை. இவர்கள் ஆலயத்தில் சிவகங்கை தீர்த்தத்தில் நீராடியபின் அன்றாடப் பணிகளைத் தொடங்குவார்கள்.

## வணங்குவோரும், வழிபடும் முறையும் :

நடைமுறை விசேஷ நாட்களான திங்கள். வெள்ளிக்கிழமை நாட்களில் பற்பல ஊர்களில் இருந்து பெருமளவில் பக்தர்கள் வழிபாட்டிற்கு வந்தவண்ணம் இருக்கின்றார்கள்.

சந்தான விருத்தி பெறவும், நோய் நொடிகள் தீரவும், வாழ்வில் விக்கினங்கள் நீங்கவும், வாழ்வில் சிறப்பெல்லாம் பெற்றிடவும், எல்லாக் குறைகளையும் ஆண்டவர் இனிதே தீர்த்து வைப்பார் எனும் முழு நம்பிக்கையுடன் முடிவைத்துக் காணிக்கை செலுத்துகிறார்கள். தீர்த்த ஆடித் தரிசனம் செய்கிறார்கள் மாவிளக்கு தலத்திலேயே தயார் செய்து விளக்கேற்றி வணங்கி குறைகளைத் தீர்த்துக் கொள்கிறார்கள்.

குழந்தைப் பேற்றிற்காக ஆண்டவனிடம் வேண்டிக் கொள்கிறார்கள். பிறக்கும் குழந்தைகளில் ஆண் பிள்ளைக்கு சோலையப்பன், சோலை விளத்தான், சோலைமலை என்றும் பெண் பிள்ளைக்கு சோலச்சி, சோலைமுத்து என்ற மற்றும் சுவாமியின் பல நாமங்களில் பெயர்வைத்து ஆண்டவனின் அன்புக்குப் பாத்திரமாகிறார்கள். ஆண்டவரை அனுதினமும் இதயத்தில் மானசீகமாகக் கண்டு மகிழ்கின்றார்கள். இப்பெயரை வைத்து அம்மக்கள் இப்பகுதியைச் சார்ந்தவர் என்றும், வேற்று ஊராயின் விரும்பி அவர்கள் இவ்வூர் வந்து வழிபாடு செய்து இறைவன் பெயரை இட்டுக் கொள்கிறார்கள் என்றும் அறியலாம்.

மேலும் பக்தர்கள் நோய் நொடியற்று மன அமைதியுற்று வாழ்வில் உயர்வடைய இத்திருக்கோயில் தலத்தில் 11 நாள், 16 நாள், 21 நாள் என்று குறிப்பிட்ட

காலங்கள் தங்கி தீர்த்தமாடி சுவாமி தரிசனம் செய்து உண்டி முதற்றே உலகு எனும் மொழிக்கேற்ப அன்னதானங்கள் செய்தும் ஆனந்தமுடன் வாழ்ந்து வருகிறார்கள். இவர்கள் தங்கி வழிபடுவதற்கு மடங்கள் உண்டு.

வழிபட வந்த பக்தர்கள் வரிசையில் சில அற்புதங்களும் நடந்திருக்கின்றன. ஆண்டவன் தரிசனத்திற்கு வந்த பக்தர் ஒருவர் எதிர்பாராத விதமாக ஆலய எல்லைக்குள்ளேயே அடங்கி விடுகிறார். அவரை நினைவு கூறும் வகையில் இவ்வாலயத்தில் சாத்தப்பையா மேடை என்று ஒரு அமைப்பும் உள்ளது.

சப்த கன்னியர்கள் ஓரமாக ஒதுங்கி ஆண்டவரை வழிபடுவதும். அந்த சப்த கன்னியர்களைப் பக்தர்கள் பக்தியாய் வழிபடுவதும் சிறப்பிற்குரியன.

இக்கோயில் வழிபாடு முறையில் ஒரு தனிச்சிறப்பு சுவாமி யோக சாஸ்தா பிரம்மச்சாரி என்பதால் பக்தர்களில் பெண்களான சிறுமிகளும், முதியோர்களும் தவிர மற்றைய பெண்கள் மூலவர் சன்னிதானத்தில் நின்று சுவாமி தரிசனம் செய்தலும், முழுச்சுற்றுப் பிரகாரம் வருவதும் தொன்று தொட்டு வழக்கம் இல்லை.

## விழாக்களும் - பக்தர்களின் நம்பிக்கையும் :

ஆலயம் என்றால் ஆண்டெல்லாம் திருவிழாக்கள் நடந்த வண்ணம் இருக்க வேண்டும். ஆண்டவன் திருவீதி உலா வரவேண்டும். பக்த கோடிப் பெருமக்கள் வணங்கி பக்தியில் ஊறித் திளைத்து ஆண்டவர் அருள்பெற்று உய்ய வேண்டும். இவ்வகையில் இவ்வாலயத்தில் சித்திரை வருடப்பிறப்பு விழா பூச்சொரிதல் விழாவாக மண்ணும், விண்ணும், மணக்கும் வண்ணம் வெகு விமரிசையாக கொண்டாடப்படுகிறது. அருகிலுள்ள மக்கள் மட்டுமல்ல, 40 கிலோ மீட்டர் தொலைவிலுள்ள ஊர்களில் வாழும் மக்களும் பூக்களை ஏந்தியும், பாற்குடம் தாங்கியும், கால்நடையாக வந்து கடவுளை தரிசித்துச் செல்கிறார்கள். அவ்வேளையில் எழுந்தருள் தெய்வம் - பரிவார தெய்வ உற்சவ மூர்த்திகட்கு அலங்கார ஆராதனைகள் நடைபெறுகிறது.

சித்திரை மாதம் வளர்பிறை அஷ்டமியில் சுவாமிக்கு காப்புக்கட்டி நான்கு கரை வல்லம்பர் சமுதாயக் கூடத்தில் சித்திரா பௌர்ணமியை எட்டாம் திருவிழாவாக வைத்து 10 நாள் திருவிழா கொண்டாடுகிறார்கள். அதற்கு புரவி எடுப்புத்திருவிழா என்று பெயர். (புரவி - குதிரை) பக்தர்கள் நோய் நொடியிலாது சந்தான விருத்தியுடன் சகலமும் பெற்று வாழ்ந்திட வேண்டிக் கொள்வார்கள். அவ்வேண்டுதலை நிறைவேற்ற சித்ரா பௌர்ணமி அன்று மண்ணால் ஆன குதிரை, காளை, பதுமை, இவைகளை பிரார்த்தனையாகச் செலுத்துகிறார்கள் மற்றும் வீட்டிலும். நாட்டிலும் விட அறவிடச் சந்துக்களை மண்ணால் செய்ததை காணிக்கயைாக செலுத்தி

வணங்குகிறார்கள். இவைகள் பாரம்பரிய ஆகமங்களாகப் பக்தர்களால் கடைப்பிடிக்கப் பெற்று வருகிறது.

கலியுக வரதனாம் அரிகர புத்திரராம் அய்யனார் ஆலயத்தில் சிவாலயங்களில் கொண்டாடப் பெறுவதுபோல் சிவராத்திரி விழா ஆறுகாலப் பூஜையுடன் கொண்டாடப் பெறுவது தனித்தன்மை வாய்ந்த ஒரு விழாவாகும். மூலவரின் வலப்புறக் காது துளைக்காததாகவும் இடப்புறக் காது தோடு அணிந்ததாகவும் காட்சி தருகிறது. சிவராத்திரி விழாவின் காரணமும் புரிகிறது. பக்தர்கள் இவ்விழாவில் பாற்குடமும், காவடியும் செலுத்துவார்கள். வெளி மண்டபத்தில் உற்சவமூர்த்திகளுக்கு அலங்கார ஆராதனைகள் செய்து திருவீதி உலா நடைபெறும்.

சித்திரை வருடப்பிறப்பு - சித்ரா பௌர்ணமி, சிவராத்திரி ஆகிய முப்பெரும் திருவிழாவும், புரட்டாசி மாதம் அசுவதி நட்சத்திர தினத்தில் ஆண்டுதோறும் லெட்ச அர்ச்சனை விழாவும், தை மாதம் சங்கராந்தி பொங்கல் விழாவும் இவ்வாலயத்தில் பலதரப்பெற்ற மக்களை யாதும் ஊரே யாவரும் கேளிர்-களாக ஆக்கி ஐக்கியப்படுத்தும் விழாக்களாக அமைந்துள்ளன.

கருணை மிக சிவகங்கை கரையமர்ந்த ஆட்கொண்ட
கணநாதா தருணமிது உனை வணங்கி சோலை ஆண்டவர்
கோயில் தல வரலாறு சொல்ல அருள் புரிந்து சிந்தையிலே
உண்மையே சேர அல்லல் அகல மறையவனே
பெருமை பெறும் நின் பொன் தாளில் சரன் புகுந்ததேன்
காக்க வேண்டும்.

என்று **கவிஞர் திரு. மு. பொன்னம்பலம்** அவர்களும்

பாண்டியர் சேரர் சோழர் பல்லவர்
பனி முடி மலர்கள் நீயே
நீண்ட மத்திகையின் வீச்சு
நெடுங்கொடி மின்னல் காட்டத்
தீண்டிய நஞ்சுக் குன்பேர்
தெய்வமூ லிகையே சோலை
ஆண்டவா அமுத ஊற்றே
ஐயனாம் அரசே! போற்றி!

என்று **கவிஞர் கோமான் க. தேசிகனார்** அவர்களும்

சோலை ஆண்டவர் சுந்தரப் பதம் பணிந்தார்
நூலை ஆண்டவர் நுணுக்கம் பெற்றார்

என்று **திரு கவியரசு கண்ண தாசன்** அவர்களும்

கொத்தரி பூஞ்சோலைதனில் குடி கொண்ட தெய்வம்
கொண்டாடும் அடியார்கள் குறைதீர்க்கும் தெய்வம்
எத்திசையும் புகழ் மணக்கும் ஏற்றமிகு தெய்வம்
ஏற்பவர்கள் வேண்டும் வரும் இனிதளிக்கும் தெய்வம்
புத்திரப்பேறு(று) அருளுகின்ற புனிதமான தெய்வம்
சொத் திதெனப் போற்றுபவர் துணையாகும் தெய்வம்
சோலையாண்டவர் நமக்குத் தொன்மையான தெய்வம்

என்று **கவிஞர் திரு கே. ஆர். சீனிவாசன்** அவர்களும்

சீர்மேவும் கொத்தரியில் கொலு விருக்கும்
சிங்காரத் தோற்றமிகு அய்ய னாரே
கார்மேவு சோலையிலே கோவில் கொண்டாய்
கரவையினம் துயில் எழுப்பத் தினமும் கண்டாய்
பார்மேவு பக்தரெல்லாம் பணிந்து போற்றி
பதறுகிறோம் கதறுகிறோம் பாரு மய்யா
தார்மேவு மார்பழகா அய்ய னாரே
தவறாமல் வந்தெமையும் காப்பாய் நன்றே

என்று **திரு கவிஞர் சோலை இராமச்சந்திரன்** அவர்களும்

கலியுக வரதனே கண்கண்ட தெய்வமே
கருனைக் கடலே காருண்ய மூர்த்தியே
ஹரிகர புத்திரனே காரிருள் நீக்குவோனே
கலை எழில் சோலையில் அமர்ந்த கடவுளே
கன்னல் தமிழாக காலமெலாம் உன்னை
கவியாலே பாடினோம் காப்பாய் எம்மையே

என்று கவிஞர் திரு. **புலவர் மாமணி மா. முத்துராமன்** அவர்களும் பாடியுள்ளார்கள்

சிவகங்கை மன்னர் சின்னமருதுவும், ராணியார் வேலுநாச்சியார் அவர்களும் கைக்குழந்தையை தொட்டிலிட்டு தோளில் சுமந்தபடி, அருள்மிகு ஸ்ரீ சோலையாண்டவரை தரிசித்து, தங்களது ஆட்சி நிலைபெற உதவிகேட்டு கர்நாடக திப்புசுல்தானை நாடிச்செல்லும் வேண்டுதலை இத்தளத்தில் செய்த வரலாற்றுச் சிறப்பு சரித்திர சான்றுடன் உள்ளது.

# "நமது பள்ளி"





*'அன்ன சத்திரம் ஆயிரம் கட்டல்*
*ஆலயம் பதினாயிரம் நாட்டல் —*
*அன்னயாவினும் புண்ணியங் கோடி*
*ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல்'* - என்ற



மொழிக்கிணங்க, பார் போற்றும் கொத்தரியில், அருள்மிகு சோலையாண்டவர் தொடக்கப்பள்ளி இயங்கிவருகிறது. பெருமைமிக்க இப்பள்ளியானது 1946-ல் தொடங்கப்பட்டு, அரசு நிதி உதவி பெறும் பள்ளியாக செயல்பட்டு வருகிறது.

1996-ல் பொன்விழாக் கண்டு, எதிர்வரும் 2006-ல் **வைரவிழாக்** காண உள்ளது. நல்லுள்ளம் கொண்ட நாட்டார் பெருமக்கள் முயற்சியால் சுமார் பத்து இலட்சம் மதிப்பில் புதிய பள்ளிக்கட்டிடம் கட்டப்பட்டு ஊரின் பெருமைக்கு அழகு சேர்க்கும் வண்ணம் உள்ளது.

இப்பள்ளியில் பயின்றோர், இன்று பல்வேறு துறைகளில், உயர்பதவியில் பணிசெய்து வருகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது. மாணவர் சீருடை, புரவலர் திட்டம், பெற்றோர் சங்கம், மாணவர் மன்றம், ஆண்டு விழா போன்ற சிறப்பான திட்டங்கள் பள்ளியில் நடைமுறையில் உள்ளது.

இப்பள்ளியானது 2002-ம் ஆண்டில் சிவகங்கை மாவட்டத்தில் சிறந்த பள்ளியாக தேர்ந்தெடுக்கப்பட்டு கேடயம் பரிசு பெற்றுள்ளது. இவ்வாண்டுமுதல் **நடுநிலைப் பள்ளியாக** தரம் உயர்த்தப்பட்டுள்ளது.

**"காலம் பொன்போன்றது"** **"கல்வி கண் போன்றது"**

என்ற கோட்பாட்டில் இப்பள்ளியின் செயல்பாடுகள். உயரிய கல்வித்தரம் என்றும் சிறந்து விளங்க எல்லாம் வல்ல இறைவன் ஸ்ரீ சோலை ஆண்டவர் அருள்புரிய வேண்டுகிறேன்.

இவண்

**சி. காந்தி** எம்.ஏ., எம்.பில்., பி.எட்.,

தலைமை ஆசிரியர்

சோலையாண்டவர் வித்தியாசாலை, கொத்தரி.

## அய்யனின் அருளாட்சி

அருள்மிகு ஸ்ரீ சோலை ஆண்டவரின் அருமைகளையும், பெருமைகளையும், அதிசயங்களையும் சொல்லிக்கொண்டே இருக்கலாம். சுருக்கமாக ஒரு நிகழ்ச்சியை மட்டும் குறிப்பிட விரும்புகிறேன்.



**திரு.மு.சொ.சித. சோலைமலை அம்பலம்**

முத்தையா அம்பலம் தெரு, அம்பலகாரர் வீடு,
கொத்தரி.

பொன்னடைச் செல்வி அம்மன் கோவில் பக்தன் ஒருவன் ஒரு காலத்தில் வடமலை சேர்வை என்பவர் இருந்தார். அவருக்கு ஒரு மகன் சோலைவளத்தன் என்பவன் இருந்தான். அவன் சிறுவயதில் (4 வயதில்) இறந்துவிட்டான். மகன் இறந்த வேதனையை தாங்க முடியாத வடமலை சேர்வை, பொன்னடைச் செல்வி அம்மன் பத்தையில் அதிகாலையில் மகன் பேரைச் சொல்லி கத்தியிருக்கிறார். அப்ப ஒரு சிறுவன் வந்து அப்பா என்று கட்டிக்கொண்டார். அந்த குழந்தை பலவான்குடியில் உள்ள ஒருவருடைய மகன். அவருடைய அப்பா வந்து அந்த குழந்தையை (பலவான்குடிக்கு) அழைத்துச் சென்றார். ஆனால் அந்த குழந்தை அவர் ஊருக்கு போகவில்லை. மறுபடியும் வடமலை சேர்வை என்பவரிடமே திரும்பி வந்துவிட்டார். அவர்தான் பலவபான்குடி, திரு. சோலைவளத்தன் சேர்வை அவர் இங்கு (கொத்தரி) வந்து விஷக்கடிக்கு மந்திரித்தும் விபூதி. போட்டு குணப்படுத்திக் கொண்டு இருந்தார். அந்த காலத்தில் அவர்களின் வீட்டுப் பெயரே **தண்ணி மந்திரக்கிற வீடு** என்று அழைக்கப்பட்டது. அவருடைய வாரிசு உடுமலைப்பேட்டை பக்கத்தில் உள்ள மடத்துக்குளத்தில் வசிக்கும் சுப்பையா அவர் ஒருசமயம் குருமிக்கண்மாய் நடைபாதையில் இரவு நேரத்தில் (குருமிக்கண்மாய்க்கும் இடையில் உள்ள நடைபாதையில் நடந்து வந்து கொண்டிருந்தார். அப்பொழுது ஒரு **விரியம் பாம்பு** ஒன்று அவரை தீண்டிவிட்டது. (மூன்று, நான்கு முறை கடுமையாக தீண்டிவிட்டது) அவர் தீண்டுவதை அறிந்து உன்னையப் பிடித்த சின்னசனியன் என்னையை ஏன் கடிக்கிறாய் என்று அப்பெரிய விரியம் பாம்பை உதிறவிட்டு வந்துவிட்டார். வந்த அவர் இங்கு திரு. மு.சொ. சிதம்பர அம்பலம் (எனது தகப்பனார்) அவரிடம் தம்பி சிதம்பரம் என்னை குருமிக்கண்மாய் ரோட்டில் ஒரு விரியன் பாம்பு கடித்துவிட்டது. உன்னை பிடித்த சின்ன சனியன் என்னை ஏன் கடிக்கிறாய் என்று உதறிவிட்டு வந்து விட்டேன் என்று கூறினார்.

ஆனால் விரியம் பாம்பு கடித்தால் விதி முடிந்துவிட்டது என்று அக்காலத்தில் ஒரு கூற்று இருந்தது. அதனால் ஆச்சரியப்பட்ட சிதம்பரம் ஐயா அவ்விடத்திற்கு சென்று பார்த்தார் அப்பொழுது அவர் ஒரு அதிசயத்தைக் கண்டார். அப்பெரிய விரியம் பாம்பு இரண்டு பாகமாக வால் முதல் தலை வரை வெடித்துக்கிடந்தது.

சோலைவளர் துய்யன் ஸ்ரீ சோலை வளர்த்த ஐயன் ஆலயத் திருக்குடமுழுக்கு விழா சிறப்புற அமைய அவனருள் வேண்டுகிறோம்



## ஸ்ரீ வெற்றி விநாயகர்

ஓங்கார ரூபமே ஒளிகூட்டும் ஜோதியே
ஒப்பற்ற தெய்வம் நீயே
உலகெலாம் உன்னாச்சி ஓங்காரத்தனிமாட்சி
ஒலி கூட்டி வழி காட்டு வாய்
ஏங்காத நாளில்லை உன்னருள் வேண்டியே
இறைவாநீ காக்க வேண்டும்
எழிலாகக் கொத்தரியில் எழுந்தருளி உள்ளநீ
எல்லோர்க்கும் அருள வேண்டும்

உற்றாரும் உறவினரும் உதவாத கால மிது
ஓடிநீ வந்து காக்க
எற்றாமல் இடராமல் இறைவாநீ எளியேனை
என்றென்றும் நின்று காக்க
கற்றாரும் கவிபாடிக் கைகூப்பி வணங்கியுன்
கால்களில் சரணமய்யா
வெற்றிவி நாயகா வேலவன் சோதரா
வேழ முகத்தய்யா போற்றி.

### குடமுழுக்கு நாள்

**28-11-2004**

**ஞாயிற்றுக்கிழமை**

**காலை 10.15-11.45**

## ஸ்ரீ அழகுநாச்சி அம்மன்

மண்ணாளும் சிவனுடன் மாதொரு பாகமாய்
மங்களம் தந்த தேவி
கண்ணாளும் கருத்தெல்லாம் கனிவோடு பணிவாகி
காலத்தை வெல் வதற்கு
நின்றாள வேண்டும் என் நெஞ்சத்தை நீங்காது
நித்தமும் காக்க வேண்டும்
அண்ணா மலையரசி அனுதினம் போற்றுவேன்
அழகுநாச்சி அன்னை உமையே

முந்நாளில் நான்செய்த பாவங்கள் போயிட
மாதாஉன் கருணை வேண்டும்
இந்நாளில் இடரேதும் எனைவந்து தாக்காது
இனியவளே காக்க வேண்டும்
பண்ணாளும் பாவால பணிந்துனை வேண்டினேன்
பராசக்தி பார்க்க வேண்டும்
அண்ணா மலையரசி அனுதினம் போற்றுவேன்
அழகுநாச்சி அன்னை உமையே



### குடமுழுக்கு நாள்

**08-12-2004**

**புதன்கிழமை**

## ஸ்ரீ சித்தி விநாயகர் காவடிச்சிந்து

சண்முகக்கவிமணி சோலை. இராமச்சந்திரன்



பிள்ளையார் சுழியிட்டேன் சாமி - இந்தப்
பிள்ளைக்கு நீவழி காமி - உன்
அருள் மேவிய புகழைக் கொடு
மருள் ஓட மகிழ்வைக் கொடு
சித்தி விநாயகன் நீயே - என்.
சிந்தை, நிறைந்திடு வாயே. (பிள்ளை)

கற்பக மாமலர்ச் சோலை - உன்
கால்களைத் தொழுவதே வேலை - நான்
உனைப்பாடிட வலிவைக்கொடு
உலகுய்திடப் பொலிவைக் கொடு
அற்புத விநாயக தேவா - இந்த
அடியவர் நலம்பெற வாவா (பிள்ளை)

சொல்கேட்ட பிள்ளையார் நீயே - சொன்ன
சொல்லுக்குத் துணை வருவாயே - உன்
திருமேவிய அழகைக்கொடு
தினந்தோறுமுன் நினைவைக்கொடு
செல்வக்கணபதி நீயே - என்
உள்ளத் துறைந்திடு வாயே (பிள்ளை)

பெரியவர் சிறியவர் கூடி - நல்ல
பெண்டிரும் பாலரும் தேடி - உன்
புகழ்பாடிட அருளைக்கொடு
இகவாழ்வினில் இனிமை கொடு
சித்தி விநாயக தேவா - இந்தச்
செல்வங்கள் நலம்பெற வாவா (பிள்ளை)

வாவியின் வடபுறம் வீற்று - என்றும்
வளமோடு எமையுங்காப் பாற்று - உன்னை
கொத்தரி நாட்டாரும், நகரத்தாரும் நாடும்,
கொண்டாடி அனுதினம் தேடும்
சித்தி விநாயகர் நீயே - எங்கள்
சிந்தை நிறைந்திடு வாயே (பிள்ளை)

## ஐந்துகரத்தோன் வழிபாடு



ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்று கின்றேனே! - திருமூலர்

பிடியதன் உருஉமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண புதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலம்உறை இறையே ! - சம்பந்தர்

திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும் செஞ்சொல்
பெருவாக்கும் பீடும் பெருக்கும் - உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்
காதலால் கூப்புவர்தம் கை - கபிலர்

திருவும் கல்வியும் சீரும் தழைக்கவும்
கருணை பூக்கவும் தீமையைக் காய்க்கவும்
பருவமாய் நமது உள்ளம் பழுக்கவும்
பெருகும் ஆழத்துப் பிள்ளையைப் பேணுவோம். - ஞானக்கூத்தர்

வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலரால்
நோக்குண்டாம் மேனி நுடங்காது - பூக்கொண்டு
துப்பார் திருமேனிக் தும்பிக்கை யான்பாதம்
தப்பாமல் சார்வார் தமக்கு. - ஔவையார்

ஓதவினை அகலும் ஓங்குபுகழ் பெருகும்
காதல்பொருள் அனைத்தும் கைகூடும் - சீதப்
பனிக்கோட்டு மால்வரைமேல் பாரதப்போர் தீட்டும்
தனிக்கொட்டு வாரணத்தின் தாள் - பெருந்தேவனார்

அல்லல்போல் வல்வினைபோம் அன்னைவயிற்றில் பிறந்த
தொல்லைபோம் போகாத்துயரம் - நல்லபோம்
குணமதிகமாம் அருணைக் கோபுரத்தில் மேவும்
கணபதியைக் கைதொழுதக் கால். - விவேக சிந்தாமணி

திருச்சிற்றம்பலம்

## சிவசாதன திருநீற்று பதிகம்



மந்திரம் ஆவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தரம் ஆவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திரம் ஆவது நீறு சமயத்தில் உள்ளது நீறு
செந்துவர் வாயுமைப் பங்கன் திருஆலவாயன் திருநீறே

வேதத்தில் உள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு
போதந் தருவது நீறு புன்மை தவிர்ப்பது நீறு
ஓதத் தகுவது நீறு உண்மையில் உள்ளது நீறு
சீதப் புனல்வயல் சூழ்ந்த திருஆலவாயான் திருநீறே

முக்தி தருவது நீறு முனிவர் அணிவது நீறு
சத்தியம் ஆவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
பக்தி தருவது நீறு பரவ இனியது நீறு
சித்தி தருவது நீறு திருஆலவாயான் திருநீறே

காண இனியது நீறு கவினைத் தருவது நீறு
பேணி அணிபவர்க் கெல்லாம் பெருமைகொடுப்பது நீறு
மானம் தகைவது நீறு மதியைத் தருவது நீறு
சேணம் தருவது நீறு திருஆலவாயான் திருநீறே

பூச இனியது நீறு புண்ணியம் ஆவது நீறு
பேச இனியது நீறு பெருந்தவத் தோர்களுக் கெல்லாம்
ஆசை கெடுப்பது நீறு அந்தம தாவது நீறு
தேசம் புகழ்வது நீறு திருஆலவாயான் திருநீறே

அருத்தம தாவது நீறு அவலம் அறுப்பது நீறு
வருத்தம் தணிப்பது நீறு வானம் அளிப்பது நீறு
பொருத்தம தாவது நீறு புண்ணியர் பூசும்வெண் ணீறு
திருத்தகு மாளிகை சூழ்ந்த திருஆலவாயான் திருநீறே

எயிலது அட்டது நீறு இருமைக்கும் உள்ளது நீறு
பயிலப் படுவது நீறு பாக்கியம் ஆவது நீறு
துயிலைத் தடுப்பது நீறு சுத்தம தாவது நீறு
அயிலைப் பொலிதரு சூலத் தாலவாயான் திருநீறே

இராவணன் மேலது நீறு எண்ணத் தகுவது நீறு
பராவணம் ஆவது நீறு பாவம் அறுப்பது நீறு
தராவணம் ஆவது நீறு தத்துவம் ஆவது நீறு
அராவணங் குந்திரு மேனி ஆலவாயான் திருநீறே

மாலோ டயனறியாத வண்ணமும் உள்ளது நீறு
மேலுறை தேவர்கள் தங்கள் மெய்யது வெண்பொடி நீறு
ஏல உடம்பிடர் தீர்க்கும் இன்பந் தருவது நீறு
ஆலமதுண்ட மிடற்றெம் ஆலவாயான் திருநீறே

குண்டிகைக் கையர்களோடு சாக்கியர் கூட்டமும் கூடக்
கண்டிகைக் பிப்பது நீறு கருத இனியது நீறு
எண்டிகைப் பட்ட பொருளார் ஏத்தும் தகையது நீறு
அண்டத்தவர்பணிந் தேத்தும் ஆலவாயான் திருநீறே

ஆற்றல் அடல்விடை ஏறும் ஆலவாயான் திருநீற்றை
போற்றிப் புகலி நிலாவும் பூசுரன் ஞானசம் பந்தன்
தேற்றித் தென்னன்உடல் உற்ற தீப்பிணி ஆயின தீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர் தாமே - திருஞானசம்பந்தர்

## சோலை ஆண்டவர் பாமாலை

### ஆக்கியோன் - பள்ளத்தூர் பெ.ஆ. கண்ணுச்சாமி அம்பலம்



1. கொத்தரியில் வாழ்சோலையப்பனைக் கைகூப்பி
   தோத்திரமாலை சிறப்பாய்ப் பாட
   முத்தமிழுக்கு வாக்கருளும் வாணிபாதம்
   முழு மனதாய்த் தொழுது மலரடி வணங்கி
   சித்திபெறக் குருபாதம் சிரத்திலேற்றி
   செல்வ விநாயகர் போற்றி முருகர் போற்றி
   எத்தலமும் நிறைந்த ஜகதீசர் போற்றி
   எந்நாளும் சோலைமலை இறைஞ்சினேனே!

2. சீர்மேவும் சோலைமலை ஐயனார் தம்
   திருவடியை தினம் நினைந்தால் செல்வஞ்சேரும்
   பார்புகழும் பாக்கியமும் பண்புஞ் சேரும்
   பாவமது பறந்து புண்யம் மிகவுஞ் சேரும்
   ஏர்மேவும் வாழ்வுமிகு இன்பஞ் சேரும்
   இருதயத்தில் இணைபிரியா ஞானஞ்சேரும்
   கார்மேகம் பொழிந்து பயிர் மிகவுஞ் சேரும்
   கவின் சோலை ஆண்டவனை கருத்தில் நினைத்தால்

3. அன்பர் உள்ளம் வாழகின்ற ஐயா வா! வா!
ஆதாரம் தந்தருள ஐயா வா! வா!
இன்பமொழி வாக்குதவ ஐயா வா! வா!
ஈகையுடன் அருள்புரிய ஐயா வா! வா!
உன் பெருமை உலகறிய ஐயா வா! வா!
ஊக்கமுடன் வாழ்க்கைதர ஐயா வா! வா!
என் பணியை ஏற்றருள ஐயா வா! வா!
ஏழை சொல் ஓங்க மனம் இறங்குவாயே!

4. உன்னருளும் பலபொருளும் தரவும் வேணும்!
உற்றதுணையாக என்றும் வரவும் வேணும்!
அன்பரெல்லாம் உன்னருளை பெறவும் வேணும்!
அகம்பாவம் தணிந்த நல்லோர் உறவும் வேணும்!
நன்மனது செம்மைவழி நாட வேணும்!
நாள்தோறும் செல்வங்கள் கூட வேணும்!
அன்னை, பிதா, குரு, தெய்வம் எல்லாம் நீயே!
ஆண்டவனே சோலையப்பா அருட்செய்குவாயே!

5. பழம்பொருளே ஹரி அரனும் ஈன்றெடுத்த; உயிர்
பாக்கியமே நன்மைபெற வணங்கி நித்தம்
தொழும் எனக்கு மனமுவந்து அன்புவைத்து
துழங்கி நலம்பெருக வைத்தாய் துறையே எங்கள்
இளம் பொருளே யாவர்க்கும் இன்பந்தந்தாய்
என்னாளும் உனைமறவேன் எந்தன் உள்ளம்
செழும் பொருளே என்குருவே அடியேன் என்னை
சீர்தூக்கி சோலையப்பா அருட்செய்குவாயே!

6. எடுத்த தொழில் விருத்தியுடன் பலிக்கவேணும்!
என்நோயும் நின்னருளால் தீர வேணும்!
கடுத்தோரை நீயடக்கி ஆள வேணும்!
கருணையுடன் உன்பெருமை காட்ட வேணும்!
அடுத்தவர்க்கு உபகாரம் செய்ய வேணும்!
அதற்கான வசதி எனக்கருள வேணும்!
திடத்துடனே செந்தமிழ் யான் பாட வேணும்!
சீர்பெருக சோலையப்பா அருட் செய்குவாயே!

7. தூய பொடி மேனியனே சுகமும் தா! தா!
தோத்தரித்தேன் வேண்டுகின்ற வரமும் தா! தா!
காயமதில் நலியணுகா கடாட்சம் தா! தா!
காப்பாற்றி குறைவற்ற செல்வம் தா! தா!
நேயமது குறையாத நினைவை தா! தா!
நித்தம் உனை மறவாத பக்தி தா! தா!

மாதவர்க்கும் சிறுவனார்க்கும் மகனே என்பால்
மனமிறங்கி சோலையப்பா அருட் செய்குவாயே!

8. சந்தனக் காப்பு அணிபவரே ஐயா வா! வா!
சக்தி மிகும் சோலைமலை ஐயா வா! வா!
மைந்தனைக் காத்தருள் புரிய ஐயா வா! வா!
மாதவர்க்கும் சிவனார்க்கும் மகனே வா! வா!
சிந்தை அறிந்தருள்பவரே ஐயா வா! வா!
சேயேன் மனக்குறைகள் யாவும் தீர்க்க வா! வா!
உந்தனையும் மறவேன் கொத்தரியில் வாழும்
உத்தமனே சோலையப்பா அருட் செய்குவாயே!

9. உன்னருளை காணாத கண்தான் என்ன?
உன்புகழைப் பாடாத வாய்தான் என்ன?
இன்பமுற உனை நினையாத மனம்தான் என்ன?
என்றேனும் சேவை செய்யா கரம்தான் என்ன?
அன்பு வைத்து வணங்காத சிந்தை என்ன?
அருள்பெறா தன்னுடலை வளர்த்தும் என்ன?
நம்பியவர்க்கு என்நாளும் மென் மேலாக
நன்மை தந்து சோலையப்பா அருட் செய்குவாயே!

10. உன்னுதவி வேண்டுவது கேட்டிருந்தும்
உதவாமல் செவிசாய்த்து இருக்கலாமோ!
என்மீது உனது மனம் இரும்போ! கல்லோ!
இளகியருள் தராதிருத்தல் இதுவோ நீதி!
உன்னடிமை உனைநம்பும் ஏழை என்பால்
தந்துதவி செய்வதும் தர்மம் அன்றோ!
பண்முறை இத்துதிக்கே என் சுவாமி என்பால்
பாக்கியமும் சோலையப்பா அருட் செய்குவாயே!

11. நித்தம் உன் தோத்திரம் நேசமாய் பாடுவோர்
நின்னருள் பெற்று வாழ்க.
நேர்வழி சென்று உன் சன்னதி வணங்குவோர்
நீடுழி வாழ்க! வாழ்க!
பக்தியாய் பணிவிடை செய்யுமுன் அடியார்கள்
பண்புடன் வாழ்க! வாழ்க!
பாதார விந்தமே கதியென்று நம்பிடும்
பக்தர் எல்லோரும் வாழ்க!
சித்திபெற அன்பர்கள் சித்திரையில் பூச்சொரியும்
செல்வர் வறியோர்கள் வாழ்க!
சீர்பெற்று கலை கற்று தாழ்வற்று வாழ்வுற்று
சிறப்புடன் வாழ்க! வாழ்க!

## சோலையாண்டவர் பதிகம்

### கவிஞர் கோமகன் பேராசிரியர் க. தேசிகனார்



### கமலக் கண் காப்பு

எங்கெங்கும் கற்பனைகட் கேற்றபடி யேதோன்றும்
செங்கமலக் கண்ணா! உன் சீர்வடிவம் - துங்கமிகு
சோலைக்குள் தோன்றிச் சுடர்கின்ற பாங்காகப்
பாலொத்த செந்தமிழில் பார்!

### 1. முறுவல் ஐயன்

செந்தமிழ் மறவன் வேலன் சேர்ந்தவர்க் கருளே செய்யும்
சுந்தரச் செம்மை பூத்துச் சுடர்விடும் முறுவல் ஐயன்
செந்தணல் செண்டு கொண்டோன் சிறுமதி வஞ்சம் போக்கி
நொந்தவர்க்கு குதவும் சோலை நோன்புடை ஒருவன் போற்றி!

### 2. எழுச்சித் தெய்வம்

வில்லெனப் புருவங் காட்டி விடுகணை யென்ன நோக்கி
நெல்லினில் உமியை நீக்கும் நெறியெனப் பாவம் போக்கும்
வல்லமை மிக்க தெய்வம் வணிகமோ டுழவு காக்கும்
எல்லையில் எழுச்சித் தெய்வம் இணையிலாத் தெய்வம் போற்றி!

### 3. தெய்வ மூலிகை

பாண்டியர் சேரர் சோழர் பணி முடி மலர்கள் நீயே
நீண்டமத்திகையின் வீச்சு நெடுங்கொடி மின்னல் காட்டத்
தீண்டிய நஞ்சுக் குன்பேர் தெய்வமூ லிகையே சோலை
ஆண்டவா! அமுத ஊற்றே ஐயனாம் அரசே! போற்றி!

### 4. பசுமை வண்ணம்

பற்பலப் புட்கள் பாட, பன்னிற மலர்கள் ஆட,
புற்புதர் கொடிமரங்கள் பொலிவுடன் தழுவிக் கூட
கற்பனை வளமை ஏடாம் காண்டகும் இயற்கை வேடத்
தற்புதப் பசுமை வண்ணத் தணிதிகழ் சோலை யப்பா!

## 5. யானை ஊர்தி

மாங்கல வளையல் தொட்டில் மகிழ்ந்த காணிக்கை யெல்லாம்
செங்கரங் கூப்பி யிட்டே செல்வமும் பேறும் வேண்ட
அங்கவர்க் குடனே நீட்டும் ஆண்டவா! சோலை யப்பா
பங்கமில் யானை யூர்திப் பகவனே! சரணம்! போற்றி!

## 6. யோகத்தின்பம்

எண்ணமும் செயலும் பேச்சும் இணைந்துநல் லறங்கள் காக்கும்
புண்ணிய ராக எம்மைப் புதுக்கிடும் தெய்வம் நீயே
அண்ணலே! காலம் மூன்றின் ஆக்கமாய் அமைந்த மூர்த்தி
எண்ணுமைம் புலனில் யோகத் தின்பமாம் இறைவா போற்றி!

## 7. வழித்துணைத் தெய்வம்

வாணிக உலகின் தெய்வம் தூயபொற் குவியல் தெய்வம்
காணிய வந்தார் உள்ளக் கறையெலாம் கழுவும் தெய்வம்
தோணிவாழ் தெய்வம் ஆழித் துறைதிகழ் தெய்வம் போற்றி!

## 8. புரவிஏறி

உடம்பொடும் உள்ளம் கொண்ட ஒப்பிலா ஆற்ற லாகித்
திடம் பெறு புலன்கள் ஐந்தில் திகழ் உயர் இன்பமாகி
இடம்பெறும் சோலை வாழ்வே! இணையிலாப் புரவி ஏறி
நடம் புரிந் தாணை காக்கும் நாயக மணியே போற்றி!

## 9. ஐந்திணைச் செறிவு

குறிஞ்சிவேல் முருகா! முல்லைக் குழலெடுத் தூதுங் கண்ணா!
அறஞ்செயும் மருத வேந்தே! அணங்குவாழ் பாலை மீளி!
உறும் பெரு மகரக் கொம்பில் ஊன்றிய வருண தேவா!
செறிந்த வைந்திணையின் இன்பச் சீர்மிகும் சோலை வாழ்வே!

## 10. தும்பை சூடி

படையெடுத் தரக்கர் கூடிப் பாயுமுன் சூலம் ஏந்தித்
தடையறத் தும்பை சூடும் தழலெனும் யோக மூர்த்தி!
சடைமுடி வாகைக் கண்ணிச் சாத்தனே! அருளுங் கையாய்!
நடைபெற அருளுங் கையாய்! நாயக! வணக்கம்! போற்றி!

## 11. சாத்தான் சரணம்

சோலைவாழ் ஐயன் றன்மேல் சுரப்பிப்பால் கற்பகத்தேன்
ஏலவே ஊற்றல் போலும் இலக்குமிப்பாடல் சொன்னால்
ஆலெனத் தழைப்பர் என்றும் ஆக்கமே அனைத்தும் கூடும்
சால்பெலாம் வளர்க்கும் சாத்தன் சரணமே சரண மாமே!

# ஸ்ரீ சோலை ஆண்டவர் விருத்தம்

சண்முகக்கவிமணி **சோலை. இராமச்சந்திரன்**



அரனாரின் ஆசையிலே வந்தாய் அன்று
அடியாரின் ஆசையிலே நின்றாய் இன்று
சரகவியில் சந்ததமும் உன்னைப் பாடி
சரணடைந்தோம் அய்யாவே நின்னைத் தேடி
துறவுநிலை கொண்டவனே சோலை அய்யா
துயர்போக்கி காத்தருளிக் கருணை செய்து
வரமளித்து வாழ்வளித்து ரட்சி ப்பாயே
வளர்சோலை ஆண்டவரே வருவாய் இன்றே

சீர்மேவும் கொத்தரியில் கொலுவி ருக்கும்
சிங்காரத் தோற்றமிகு அய்ய னாரே
கார்மேவு சோலையிலே கோவில் கொண்டாய்
கரவையினம் துயில்எழுப்பத் தினமும் கண்டாய்
பார்மேவு பக்தரெல்லாம் பணிந்து போற்றி
பதறுகிறோம் கதறுகிறோம் பாரு மய்யா
தார்மேவு மார்பழகா அய்ய னாரே
தவறாமல் வந்ததெமையும் காப்பாய் நன்றே

வாவியிலே மூழ்கிவந்து வழக்கு ரைத்தால்
வந்தவர்தம் குறைபோக்கும் அய்ய னாரே
பாவிகளும் பணிந்துன்னைப் பலனும் காண
பாலகனும் பதறுகிறேன் செவிகே ளாதோ
தாவிவரும் பாலகனைத் தாயே தள்ளும்
தண்மையிலே இருக்கலாமோ நீரே சொல்லும்
கூவியுனை அழைக்கின்றேன் குறைகே ளாயோ
ஆண்டவரே அடியேனின் உயிர்காப் பாயே

சோலையிலே நீயிருக்கும் கார ணத்தால்
சூழ்ந்திருக்கும் வாவிகளும் சொர்க்க மாகும்
பாலையிலே பாலகனும் துடிக்கும் காட்சி
பைம்பொழில் நீந்துவதாய் நினைக்க லாமோ
வேளையிலே விரைந்துவந்து காக்கா விட்டால்
விபரீதம் விளைந்திடுமே அய்ய னாரே
ஆலையிலே அகப்பட்ட பூவைப் போலே
அடியேனும் ஆகாமல் அய்யா காப்பாய்

கண்டதெல்லாம் காட்சியாகும் காலம் இன்று
கலிமுத்திப் போனதாலே மதிம யங்கி
கொண்டதெல்லாம் கோலமாகக் கொண்டு வாழும்
கொடியவரே கொடிகட்டி ஊரை ஆளும்
சண்டாளத் தன்மையிலே உலகே மாறும்
சகியாத கோலத்தில் சிக்கி டாமல்
வண்டாடும் வளர்சோலை அய்ய னாரே
வந்திரங்கி வாழவைத்து ரட்சிப் பாயே

தொல்லைபல சூழ்ந்திருக்கும் இந்த நாளில்
தொடர்வினையும் வாட்டாது காப்ப தற்கு
இல்லையொரு தெய்வமினி உன்னை விட்டால்
இடரேதும் வாராமல் காப்பாய் அய்யா
கொல்லையிட்ட பயிரைவேலி மேய்வ தேபோல்
கொடுத்திட்ட உடலைநோயும் பாதிக் காது
எல்லையிலாச் சக்திநிறை அய்ய னாரே
இதுசமயம் இரங்கிவந்து ரட்சிப் பாயே

நாட்டாரின் நலம்காக்கும் அய்ய னாரே
நான்குகரை வல்லம்பர் குலத்தின் தெய்வம்
கேட்டார்க்கு கேட்டபடி வரமும் தந்து
கொடுவினையும் போக்கிவைக்கும் அய்ய னாரே
நாட்டமுடன் நாடிவரும் எங்க ளுக்கு
நல்லகதி நீகொடுத்து காக்க வேண்டித்
தேட்டமுடன் தேடிவரும் எங்க ளுக்கு
தீதகற்ற ஆண்டவரே வருவாய் இன்றே

எண்ணற்ற தெய்வங்கள் இருந்த போதும்
என்குலத்தின் தெய்வம்நீ அய்ய னாரே
கண்ணற்ற குருடனாகி கலங்கி டாமல்
கணமேயும் என்நினைவை மறந்தி டாமல்
என்பிறவி இனிதமைய சோலை அய்யா
என்றென்றும் என்பக்கம் நீயி ருக்க
வெண்புரவி ஏறிவரும் அய்ய னாரே
வளர்சோலை ஆண்டவரே ரட்சிப் பாயே

அண்ணன்மார் அனைவருக்கும் இளைய தெய்வம்
ஆனாலும் உனைச்சுற்றி இருக்கும் தெய்வம்
வண்ணத்தில் கருப்பாகும் உள்ளம் வெள்ளை
வாகான தோற்றம்பேர் கருப்ப ராகும்
எண்ணிடவே குலைநடுங்கும் இவளின் பேரை
ஏகாந்தி மாகாளி துணையு முண்டு
சந்நாசி சப்தகன்னி பிரம்மத் தெய்வம்
சூழ்சோலை ஆண்டவரே ரட்சிப் பாயே

கதிகெட்டுப் போனாலும் காக்கும் தெய்வம்
கருப்பரிலே மூத்தவனாம் குதிரை வீரன்
பதினெட்டாம் படிக்கருப்பர் முனியும் கூட
பாங்காக உன்னருகே வீற்றி ருக்க
மதிமுட்டும் மரமெல்லாம் குடைபி டிக்க
மலர்சோலை ஆண்டவரே நீயி ருக்க
விதிகெட்டு ஓடாதோ உன்பேர் சொல்ல
வீராநீ உயிர்காத்து ரட்சிப் பாயே

## காத்தருள்வாய் ஆண்டவனே!

### இராம. கண்ணையா

1. சோலை ஆள்பவனே! ஜோதிமய மானவனே!
தூயமனச் சன்னாசி குடிவலம் கொண்டவனே!
ஆலைவாய்க் கரும்பன்ன அல்லலுறும் எங்களை நீ
ஆட்கொண்டு வரமருளி அகமகிழ்வு தந்தருள்வாய்!

2. ஊரெல்லாம் ஏரிக்கரை உறைவிடமாய்க் கொண்டவனே!
உன்பாதம் போற்றியிந்நாள் ஊர்கூடி வாரோமையா!
பாரெல்லாம் உன்புகழே பாதுகாத்த லுன்தொழிலே!
பாடியாடி யாம்வாரோம் பாதுகாக்க வேணுமையா!

3. அப்பனாகி அம்மையாகி ஐயப்ப சாமியாகி
அகிலமெல்லாம் பரவியுறை ஆண்டவனும் நீதானே!
ஒப்பில்லா இறைய வனாய் ஒளியாகி வளியாகி
ஓங்கார நாதமாய் உயர்வானாய் யானாய்!

4. கண்கண்ட தேவனாய் காவல்தெய் வமுமாகி
கானெல்லாம் நீயாடிக் களிப்பருள வந்தவனே!
பண்போடு வாழ்ந்திடவே பரமபதம் நீகாட்டி
பாரெல்லாம் நலமுறவே பாதுகாக்க வேணுமையா!

5. பால்குடங்கள் காவடிகள் பக்தர்கள் சுமந்துவர
பாங்கான உன்புகழை பாவாலே கூறிவர
காலாடத் தாலாட கருத்தெல்லாம் நீயாடக்
கடுகியாம் வருன்றோம் காத்தருள்வாய் ஆண்டவனே!

## அரகரோகார

### சண்முகக்கவிமணி புலவர் இராம. வீரப்பன்

அரக ரோகரா சாமி அரக ரோகரா
அரக ரோகரா சாமி அரக ரோகரா

1. சித்திவி நாயகனுக்கும் அரகரோகரா
செந்தில் வடிவேலனுக்கும் அரகரோகரா
பத்ர காளிக்கும் அரகரோகரா
பதினெட்டாம் படியோனுக்கும் அரகரோகரா

2. பிர்ம சுவாமிக்கும் அரகரோகரா
பீடுசன் னாசிக்கும் அரகரோகரா
பெரிய கருப்பருக்கும் அரகரோகரா
பேணி நிற்கும் பக்தனுக்கும் அரகரோகரா

3. கொப்பனக கோட்டைக்கும் அரகரோகரா
கோபக்கார முனியனுக்கும் அரகரோகரா
சப்த கன்னியருக்கும் அரகரோகரா
சாஸ்தாவம் அய்யனுக்கும் அரகரோகரா

4. அடைக்கலம் காத்தாருக்கும் அரகரோகரா
ஹரிகரன் மைந்தனுக்கும் அரகரோகரா
புடைசூழும் அடியவர்க்கும் அரகரோகரா
பூங்காவாம் கொத்தரிக்கும் அரகரோகரா

5. சோலைமலை அப்பனுக்கும் அரகரோகரா
சொகுசுக் காரச் சுப்பனுக்கும் அரகரோகரா
ஏழைகளைக் காப்போனுக்கும் அரகரோகரா
எருமேளி மூர்த்திக்கும் அரகரோகரா

6. மகிஸி மர்த்தனனுக்கும் அரகரோகரா
மஞ்சள் மாதாவிற்கும் அரகரோகரா
மோகினி சுதனுக்கும் அரகரோகரா
மோகன ரூபனுக்கும் அரகரோகரா

## கொத்திரியில் வீற்றிருக்கும் ஆண்டவா

- கவிஞர். பள்ளத்தூர் லெட்சுமணன்



அண்டவா எங்களை ஆண்டவா சோலை ஆண்டவா
சுகம் தரும் அய்யனார் பெருமானே வருக வருக
கொத்தரியில் வீற்றிருக்கும் ஆண்டவனே
கொஞ்சு தமிழில் அடியேன் பாடவா

அய்யனாராய் அவதரித்த உத்தமனே
அனைத்தும் காத்த வல்லவனே
அடியேனுக்கு அருளவேண்டு ஆண்டவா
அகிலமெல்லாம் காக்கவேண்டும் ஆண்டவா (ஆண்டவா)

ஆறுகலா பூஜையிலே ஆண்டவா
ஆனந்தமே தந்திடுவாய் ஆண்டவா
செல்வச் சிறப்போடு ஆண்டவா
செட்டிநாடு உயரவேண்டும் ஆண்டவா (ஆண்டவா)

இன்னல்களை நீக்கவேண்டும் ஆண்டவா
இனியும் என்ன தாமதமோ ஆண்டவா
இன்பமதைப் பெருக்கிடுவாய் ஆண்டவா
இனிமையாக வாழச் செய்வாய் ஆண்டவா (ஆண்டவா)

உன் அருளால் நாங்கள் உள்ளோம் ஆண்டவா
உற்றதுணை நீ வருவாய் ஆண்டவா
உன்னை நம்பித் தொழில் புரிவோம் ஆண்டவா
உரியலாபம் தந்திடுவாய் ஆண்டவா (ஆண்டவா)

செய்யும் தொழில் சிறக்கவேண்டும் ஆண்டவா
செவ்வனே நடக்க அருள்வாய் ஆண்டவா
சோலை நடுவில் அமர்ந்திருக்கும் ஆண்டவா
சோலை யப்பன் நாமம் சொல்வோர்க்கு
அருள வேண்டும் ஆண்டவா (ஆண்டவா)

கள்ளர் வரும் காரிருளில் ஆண்டவா
கருப்பர்என நீவருவாய் ஆண்டவா
கிழக்கு நோக்கி அமர்ந்திருக்கும் ஆண்டவா
கீர்த்தி களைத் தந்திடுவாய் ஆண்டவா (ஆண்டவா)

குதிரை மேலே ஏறிவரும் ஆண்டவா
குற்றங்களைப் பொறுத்துக் கொள்வாய் ஆண்டவா
குறையாத குணக்குன்றே ஆண்டவா - எங்கள்
குலம் முழுதும் உன்அடிமை ஆண்டவா (ஆண்டவா)

தொன்றுதொட்டுக் காத்துவரும் ஆண்டவா
தொழில் ஓங்கச்செய்திடுவாய் ஆண்டவா
வஞ்சகர்கள் எதிரில் வந்தால் ஆண்டவா
வஞ்சனையை மாற்றிடுவாய் ஆண்டவா (ஆண்டவா)

சித்திரைப் பூப்போல ஆண்டவா
சிரிப்புடன் இருக்க வேண்டும் ஆண்டவா
சிவன் ராத்திரி பூஜையிலே ஆண்டவா
சிறப்புடன் விளங்கவேண்டும் ஆண்டவா (ஆண்டவா)

தாழ்வெல்லாம் நீக்கிடுவாய் ஆண்டவா - மனம்
தளராமல் உயரச்செய்வாய் ஆண்டவா
தரணிபுகழ் தங்கமே ஆண்டவா
தங்கள் பாதம் சரணடைந்தோம் ஆண்டவா (ஆண்டவா)

பாலனுக்கு அருளவேண்டும் ஆண்டவா
பள்ளத்தூரான் பாடுகிறேன் ஆண்டவா
நாடு நலம்பெற வேண்டும் ஆண்டவா
நாராயணபுரத்தான் பாடுகிறேன் ஆண்டவா (ஆண்டவா)

## சோலையாள் மன்னன்

தானாத நாதந்த நானா - தன
தானாத நாதந்த நாதந்த நானா

சுகம்தந்து வினைதீர்பா னையன் - நல்ல
துணைநல்கி வளமளித்துத் துயர்தீர்க்கும் தெய்வம்
அகமகிழ வாழ்வுதரும் தேவன் - இந்த
அவனியிலே அவன்போல ஆண்டவனும் உண்டோ (தானாத)

அழகான வெண்புரவி மேலே - அவன்
அமர்ந்துவரும் வீதிஉலா அனைவருக்கும் ஏற்றம்!
பழம் நிறைந்த சோலைதனில் தங்கி - ஐயன்
பாரோங்கப் பயன்தந்து பாதுகாக்கும் தெய்வம்! (தானாத)

வேண்டியநல் வரமளிக்கும் தேவன் - எண்ணில்
வீரத்தை விவேகத்தை விளைத்திடுமெம் இறைவன்!
காண்கின்ற உருவெல்லாம் அவனே - நாட்டில்
கருணைதனைப் பெய்துநல்ல களிப்பருளும் தலைவன் (தானாத)

ஊர்காக்கச் சோலைதனில் தங்கி - நல்லோர்
உளமெல்லாம் இடமாக்கி உறைந்திடுநல் லாண்டான்!
பார்காக்கும் ஆண்டவனாய் நின்று - இந்தப்
பாரெல்லாம் காத்திடுவான் பரமபதம் தருவான் (தானாத)

# வருவாய் இதுசமயம்

## சண்முகக்கவிமணி புலவர் இராம. வீரப்பன் பாடல்கள்



1. சித்தி விநாயகனே! சீர்சால் கணபதியே
   கொத்தரி அய்யனுக்கு கொடுக்கின்ற என்மனுவை
   முத்திரையும் குத்தி முழுசாய்ப் பரிந்துரைக்க
   மத்தளநல் வயிறோனே மாமணியே காப்பாவாய்

2. சங்கரனார் மோகினியை சந்தித்த வேளையிலே
   பொங்கியெழும் காதலினால் பூத்த திருக்குமரா!
   வெங்கொடுமை மகிஷியினை வேரறுக்க வந்தவனே
   மங்கலத் திருவிளக்கே வருவாய் இதுசமயம்

3. சோலையிலே பூத்தவனே சுந்தரமாய்த் திகழ்வோனே
   வாலைக் குமரியெல்லாம் வலைபோட நினைக்கையிலே
   ஏழை எளியோரை ஈடேற்றும் எண்ணத்தால்
   மாலையிடா மன்னவனே வருவாய் இதுசமயம்

4. அய்யனார் என்றுன்னை யாவருமே துதித்திடுவர்
   பொய்சொல்லா மெய்யனாய் பொன்னான சாத்தனாய்
   நெய்யாடும் சாஸ்தாவாய் நீடுபுகழ் சோலையனாய்
   வையத்தை வாழ்விக்க வருவாய் இதுசமயம்

5. கண்மாய்க் கரையினிலும் கருவிருட் காட்டினிலும்
   விண்முட்டும் மலைமுகட்டில் வெம்மைமிகு பாலையிலும்
   தண்ணீர்க் குளக்கரையில் தானாட்சி செய்தாலும்
   மண்ணான என்மனத்தில் வருவாய் இதுசமயம்

6. சாதி சமயத்தை சரியாய் இணைத்தவனே
   நீதிக்குப் போராடி நிம்மதியைத் தந்தவனே
   சோதியாய் மாமலையில் சிரிக்கின்ற நல்லமுதே
   வாதுசெய்து நிற்காமல் வருவாய் இதுசமயம்

7. பதினெட்டாம் படியோனும் பக்கத்தில் காவலிட
   அதிகாரக் காளியாத்தா அன்போடு நீற்றிருக்க
   சுதிகூட்டும் பிரம்மசாமி சோர்வகற்றி எமைக்காக்க
   மதிமுகத்து சோலையப்பா வருவாய் இதுசமயம்

8. விருப்பான சன்னாசி விஷக்கடியைத் தான்துறத்த
   கருப்பண சாமியுடன் காக்கின்ற முனியய்யா
   அருமைமிகு கன்னியரும் அடைக்கலம் காத்தாரும்
   மறுவின்றி எமைக்காக்க வருவாய் இதுசமயம்

9. அன்னதான வள்ளலே ஆளுகின்ற பேரரசே
மன்னவனாய்த தான்பிறந்தும் மாத்துறவு பூண்டவனே
சின்னவனின் பாட்டுனக்கு செவிகளில் ஏறலையோ
வண்ணமலர் கைகொடுக்க வருவாய் இதுசமயம்

10. நாரணனின் மருகோனே நமசிவாய புத்திரனே
பூரண நன்நிலவே பூவடியில் நான்வீழ்ந்தும்
காரணத்தைச் சொல்லிடுவாய் களமிறங்கத் தாமதமேன்
வாரவழி காத்திருப்பேன் வருவாய் இதுசமயம்

11. வெள்ளைக் குதிரையிலே வேகமாக வருவோனே
உள்ளமாம் சேனத்தில் உட்கார்ந்தால் ஆகாதோ
நல்லபடி யானையிலே ஞாலத்தில் வருவானே
வல்லளம் பாட்டுக்கு வருவாய் இதுசமயம்

12. உயிர்வாழத் துடிக்கின்றோம் உன்னடியைப் பிடிக்கின்றோம்
பயிர்செழிக்கும் மாமழையே பண்கொழிக்கும் செந்தமிழே
குயிலபாடும் சோலையிலே கூவி அழைக்கின்றோம்
மயிலாக நீயாடி வருவாய் இதுசமயம்

13. பிணியகற்றும் மாமருந்தே பேயகற்றும் மந்திரமே
கனிவான முகங்காட்டி காரியத்தைச் செயலாக்க
அணிஅணியாய் எம்குடும்பம் அடிபணிந்து தெண்டனிட்டோம்
மணிகண்ட மார்பழகா! வருவாய் இதுசமயம்

14. அலைகடலில் துரும்பானேன் ஆசையினால் இரும்பானேன்
தொலையாப் பிறவியினை தொடரவும் செய்யாமல்
நிலையான வாழ்வுக்கு நீடுசுகம் காண்பதற்கு
வலைபோட்டே இழுக்கின்றோம் வருவாய் இதுசமயம்

15. முத்திரை கையிருக்க முறுவலோ முகமிருக்க
சித்திரையின் விஷுக்கனியே செல்வக் களஞ்சியமே
நத்தியுன்னைத் தொழுவோரை நாளெல்லாம் காப்பதற்கே
மத்தளங்கள் தான்முழங்க வருவாய் அதுசமயம்

16. அல்லியொடு செண்பகத்தை அரளியுடன் கட்டி வைத்தேன்
நல்ல மருக்கொழுந்தை நாள்மணக்கும் செவந்தியினை
முல்லைரோஜா கூட்டணியில் முன்னிருந்து நான்தொடுக்க
மல்லிகைப்பூ மணத்தோடு வருவாய் இதுசமயம்

17. ஊராரும் நாட்டாரும் உவந்துதினம் வணங்கையிலே
சீராரும் நகரத்தார் சேர்ந்துதினம் துதிக்கையிலே
ஆரா அமுதமென அன்பரினைக் காப்பதற்கே
வாரா திருக்கலாமோ வருவாய் இதுசமயம்

18. நஞ்சையுடன் புஞ்சைகளும் நாளும் சிறந்தோங்க
கொஞ்சிவளர் கைத்தொழில்கள் கூடிக் குலவிவர
அஞ்சலின்றி உத்தியோகம் அனைவருக்கும் பொதுவாக
மஞ்சாடும் மலையழகா! வருவாய் இதுசமயம்

19. எண்ணாக எழுத்தாக ஈடேறும் கனவாக
பண்ணாகப் பாவாக பண்பாட்டு நிலமாக
பெண்ணாக ஆணாகப் பேணும் பொருளாக
மண்ணாட்சி செய்வதற்கே வருவாய் இதுசமயம்

20. காப்புடனே இருபத்தை கவிமாலை புனைந்துவைத்தே
மூப்பில்லா மூர்த்திக்கு வீரப்பன் சூட்டுவதில்
கூப்பிடு குற்றமென கோலெடுத்துச் சாடாமல்
மாப்பாக மன்னிக்க வருவாய் இதுசமயம்.

## யானையின் மீதேறி



1. புங்கோடு பாலை புளியோடு வீரை
பெருமையாய்க் குலுங்கி நிற்க
தெங்கோடு மாவும் தேனோடு பூவும்
சிரிக்கின்ற சோலை அய்யா!
சங்கூதும் ஆலை பங்கேற்று நிற்கும்
தனவணிகப் பூமி வாழ்வே!
மங்கலம் தந்தருள யானையின் மீதேறி
வரவேணும் என்றன் அருகே

2. ஆவியில் மேவிய அய்யனார் அப்பனே
அன்பருமை கொண்ட அழகா!
பாவிநான் என்றாலும் பைந்தமிழ் கேட்டேனும்
பாவத்தைப் பொறுத்திடாயோ?
தாவியே வந்திங்கே தளர்வினை ஓட்டிட
சாகஸம் செய்ய லாமோ!
வாவிசூழ் அய்யனே யானையின் மீதேறி
வரவேணும் என்றன் அருகே

3. கோனான உனக்குமே குதிரை எடுப்பினை
கூட்டிடு கருவியப்பட்டி
கானாடு காத்தானும் நேமத்தான் பட்டியும்
காவடி கட்டி வாரார்
மானாடு கொத்தரி மகிமையாம் பள்ளத்தூர்
மருவிவாழ் எங்கள் ஈசா
வானாடு எனப்போற்றி யானையின் மீதேறி
வரவேணும் என்றன அருகே

4. கலையினைத் தொடுக்கவும் களையினை எடுக்கவும்
கண்கண்ட தெய்வம் நீயே
உலையினைப் பொங்கவும் ஊழ்வினை மங்கவும்
உன்னையே வணங்கு கின்றோம்
தொலையாத வல்வினையைத் தொலைக்கும் தெய்வமே
தொலைவிலே இருக்க லாமோ?

5. பணிவோடும் கனிவோடும் பாடிடும் பாட்டின்
பாசத்தை அறிந்திடாயோ
துணிவோடும் துணியோடும் எந்நாளும் வாழவே
தொல்லைகள் போக்கு விப்பாய்
வணிகரும் உழவரும் வற்றாத தொழில்களும்
வாடாது வாழ வைக்க
மணிகண்ட மார்பனே யானையின் மீதேறி
வரவேணும் என்றன் அருகே

6. கொட்டகின்ற தேள்களும் கொத்திடு பாம்பினமும்
கொத்தரியின் நாமம் கேட்டால்
சட்டென விலக்கிட சடுதியில் மறைக்கின்ற
சாலத்தை எங்கு கற்றாய்!
துட்டப் பிசாசினத்தை துயரான வெஞ்சினத்தை
துரத்திடும் சோலை அய்யா!
வட்டமாய் வலம்பெறவே யானையின் மீதேறி
வரவேணும் என்றன் அருகே.

7. பாலைய நாட்டார்கள் பரவியே தொழுதிடும்
பரந்தாமன்,பெற்ற பிள்ளாய்!
சோலைநல் ஆண்டவா சுந்தரத் தெய்வமே!
சொர்க்கத்தை ஆளும் அரசே
ஏழையாம் நாங்களும் ஏற்றம் கண்டிட
இயற்றினோம் இனிய கவிதை
மாலைகள் சூடிய யானையின் மீதேறி
வரவேணும் என்றன் அருகே.

8. சாதுவாய் நீயிருக்க சாத்தையா என்றுனது
தளிரடியைப் போற்று கின்றோம்
நீதியாய் நீவிளங்க மெய்யப்பன் ஆனவா
நீடுபுகழ் தவத்தின் சாஸ்தா
பாதுகாவல் செய்கையில் அய்யனார் ஆனவா
பழனமிகு சோலை ஆண்டவா!
வாதாடி நிற்காமல் யானையின் மீதேறி
வரவேணும் என்றன் அருகே.

9. பெண்ணை மணம் கொள்ள பெரும்பொருளைக் கேட்காத
பெரியநல் மனது தாராய்
கண்ணை ஒளியூட்ட கல்வியாம் பொன்விளக்கை
காலத்தில் ஏற்றி வைப்பாய்
மண்ணைச் சிறப்பாக்க மாரியாம் அன்னையை
மருவிட அழைத்து வாராய்
வண்ணமிகு செய்கைக்கு யானையின் மீதேறி
வரவேணும் என்றன் அருகே.

10. உழவர் வாழி உயர் செல்வர் வாழி
உழைக்கின்ற கரங்கள் வாழி
புலவர்கள் வாழி பொறுமையினர் வாழி
புகழ்நிறை அறிஞர் வாழி
நலமோடும் வளமோடும் நகரத் தார்கள்
நாள்தோறும் வாழி வாழி
வளமான தொழில்காண யானையின் மீதேறி
வரவேணும் என்றன் அருகே.



## வினைகள் தீர்த்திடு சோலையா!



வெள்ளைப் புரவியின் மீதினிலே - ஏறி
வீதி உலாவரும் சோலையா!
வெள்ளை உளப்பக்தர் கூடியே - நல்
வீதி உலாவாரோம் பாரையா! (வெள்ளை)

ஊரெலாம் காத்திட உளம்கொண்டே - எங்கும்
ஊருணிக் கரையெல்லாம் உறைகின்றாய்!
பாரெல்லாம் பரவி நீயுள்ளாய் அந்தப்
பண்பினை எண்ணிக் களிக்கின்றோம் (வெள்ளை)

சோலைகள் உறைவிட மாக்கியே - அன்பர்
சன்னாசித் தேவர் வலமாக்கி
சோலை யாண்டவர் பேருடனே - மக்கள்
சுகம்காண வழிகாட்டும் சோலையா! (வெள்ளை)

நம்பிடு வோர்களுக் கிடையூறு - செய்யும்
நயவஞ்சகர்களை நசுக்கிடுவாய்
வெம்பியே தீயோர் மனம்மாறி - வாழ
விவேகம் காட்டி மகிழ்ந்திடுவாய்! (வெள்ளை)

பங்குனித் திங்கள் விழவெடுத்து - மக்கள்
பக்தி பெருகிட உனைப்பாடி
தங்கு தடையின்றி வருகின்றோம் - எம்மைத்
தயைநல்கிக் காத்திட வேண்டுகின்றோம் (வெள்ளை)

சித்திரை முதல்நாளில் புகழ்பாடி - உன்னின்
சித்துக்கள் நிறைந்த செயல்பாடி
இத்தரை மீதினில் சுகம்பெறவே - நாளும்
இன்ப வழிகாட்டு சோலையா! (வெள்ளை)

ஐயப்ப சாமியும் நீதானே - ஊரில்
ஐயனார் தெய்வம் நீதானே!
மெய்யர்க ளுன்னடி போற்றியல்லோ - தினம்
மேநிலை யுறுதல் கண்கூடு (வெள்ளை)

கொள்ளை யழகுன் சோலையிலே - அங்கே
கோலமிகு காட்சி கோயிலிலே!
பிள்ளைகள் நாங்க ளுந்தனுக்கே - நலம்
பெற்றிட வாழ்வினில் செய்யுமையா (வெள்ளை)

ஆண்டி முதலதி செல்வர்வரை - மனம்
ஆள்கின்ற சோலை ஆண்டவனே!
வேண்டி னோம்நல்வழி காட்டிடவே - எங்கள்
வினைகள் தீர்த்திடு சோலையா! (வெள்ளை)

## ஸ்ரீ சோலையாண்டவர் துணை

பண்டைக் காலத்திலிந்தே தமிழ்நாட்டில் எல்லா ஊர்களிலும் கிராம தேவதையாக வழிபட்டு வரும் கடவுள் அருள்மிகு ஐயனாரும் அவரது பரிவாரங்களான கருப்பர், மாடன், வீரன், முனீஸ்வரன், பேச்சியம்மன், காளி, இருளன் முதலிய தேவதைகளே என்பது நாம் அறிந்துள்ளோம். அவ்வகையில் பள்ளத்தூரைச் சார்ந்த கொத்தரியில் கிராம தேவதையாக விளங்கி அற்புதங்கள் பல செய்து எண்ணிலடங்காத பக்த கோடிகளைக் கொண்ட தெய்வம் ஸ்ரீ சோலையாண்டவரே.

ஆங்கிலச்சொல் சோல் (Soul) என்பதன் பொருள் ஆத்மா என்பதாகும். அதனால் பூஞ்சோலையில் வயலின் நடுவில் சோலை ஆண்டவன் என்பதுதான் உண்மைப் பெயரானாலும், ஆங்கிலச்சொல் ஐ ஆண்டவன் என்றும் மிகையாகச் சொல்வதும் பொருத்தமே. அதனால் பக்தர்கள் ஸ்ரீ சோலையாண்டவரை மிக்க ஈடுபாட்டோடு வழிபட்டு நலம் பலவும் பெற்று வாழ்வு பெறப் பெரிதும் விழைக்கின்றேன்.

இங்ஙனம்

**இறைப்பணியில் கே.ஆர். சீனிவாசன்**

## ஸ்ரீ சோலையாண்டவர் துதி (காவடிச்சிந்து)

அண்டர்கள் துயரம்தீர அசுரர் குலம் வேரறுக்க
அய்யன் சோலையாண்டவனே தோன்றினான் - அவன்
அடிமலர்கள் சூடி மகிழ்ந்தாடுவோம் - தன்னை
நாடிவந்தவர் வேண்டிடும் வரம் நல்கிடும் கொடைவள்ளலாகிய
நாயகன் இசைபரவிப் பாடுவோம் - தரும்
நன்மையெல்லாம் போற்றியே கொண்டாடுவோம்.

அச்சுதனே மோகனியாய் ஆதிசிவனோடிணைய
அதிசயமாய்த் தோன்றினான் நம் ஐயனே - தன்
அன்பர்கள் பகையொழிக்கும் மெய்யனே - நல
அமுத மதலைகள் மொழியும் மழலைகள்
அருளுகின்ற நம் சோலையாண்டவன்



ஆற்றலைப் புகழுவோம் எந்நாளுமே - அவன்
ஆசியால் பேரின்பம் நம்மைச் சேருமே
கொத்தரிவாழ் சோலையாண்டவன்
குரைகழகல் சரணடைவோம் குவலயத்தில் கோடியின்பம்
காணுவோம் - வளர்

குலம் உயர்ந்து குதூகலமாய் வாழுவோம் - நம்
நெஞ்சில் எண்ணிய நன்மையானவையும் தந்துவந்திடும் தண்ணளியான்
தஞ்சமாகும் மாண்பினையே பாடுவோம் - அருள்
தர்ம சாஸ்தாவின் திறங் கொண்டாடுவோம்.

சங்கடந்தீர் ஐங்கரனின் தம்பியான சோலையாண்டவன்
மங்கலம் தந்தன்பர்களை வாழ்த்துவான் - நல்ல
மக்களையும் நல்கிப் பகை வீழ்த்துவான் - உயர்
வானவர் போல் வாழ்வளித்திடும் வள்ளலாமவன் மலரடிகள்
மனதிலே துதிப்போம் இன்பம் கூடுவோம் - அந்த
மாட்சிமேவும் ஐயனிசை பாடுவோம்

சுப்பிரமண்யன் தம்பியான சோலையாண்டவன் மகிமை
தொல்லுலகில் மாந்தரெல்லாம் சொல்லுவார் - அந்த
வள்ளல் தரும் நன்மைகளைக் கொள்ளுவார் - தன்னைச்
சரணடைந்தவர் தாரணியில் மரணபயமே இலாது
சந்ததமும் வாழவருள் செய்பவன் - அந்த
தர்மசாஸ்தா தாள் பணிந்தே எய்குவோம்.

## இராகம் : தன்யாசி (கீர்த்தனை)

பல்லவி மக்கள் கவிஞர் அரு. நாகப்பன், காரைக்குடி.

அருள்மா நிதியே கொத்தரிச் சோலை
ஆண்டவனே சரணம்

அநுபல்லவி

இருள்மாயச் செய்யும் இரவிசமான
தெருள் மேவியதே ஜோதிமயமான (அருள்)

சரணம்

எண்ணிய நன்மைகள் யாவுமே தந்தாய்
என்செயல் எல்லாம் நீயே புரிவாய்
நண்ணிய சன்மார்க்கம் தருவாய் ஐயா
ஞானானந்த சொரூபனே மெய்யா (அருள்)

நாட்டார் உன்பணி செய்து திகழ்வார்
நகரத்தார் பல வைபவம் புரிவார்
மேட்டிமையாய் அடியார் மனம் மகிழ்வார்
மேதினியோர் உன்னை நற்கதி கேட்பார் (அருள்)

வேண்டிடும் அன்பர்க்கு மகப்பேறு அருள்வாய்
மேன்மேல் வளர்ந்தொழில் ஆக்கமும் தருவாய்
பாண்டிநன் நாட்டினில் பள்ளத்தூர் வளர்
பக்தர்கள் போற்றிடும் வித்தகச் செல்வா (அருள்)

## வையகத்தைக் காப்பாற்றும் வளர்சோலை ஆண்டவன்

பள்ளத்தூர் செல்லும்வழிப் பாதையிலே கோவில் கொண்டு
உள்ளத்தை ஈர்க்கின்ற உயர்சோலைக் குள்ளிருந்து
வெள்ளமென அருள்பொழிந்து வினைதீர்க்கும் ஈஸ்வரனே!
வள்ளலுனை வணங்குவோர்க்கு வாழ்வளிக்கும் நாயகனே!

கொத்தரியில் தானமர்ந்து கொடுவிஷத்தை நீக்குகிற
உத்தமராம் ஆண்டவரே உயிர்காக்கும் மாமருந்தே!
சத்தியத்தின் வழிநிற்போர் சந்நதியாய் உருவாகி
நித்தமுமே காக்கின்ற நிலைத்த புகழ் ஆண்டவரே!

நீர்நிலைகள் ஊருணிகள் நீண்டவழிக் கண்மாயுடன்
சீர்மிகுந்த பசுமரங்கள் சிறப்பான சோலைவனம்
பார்முழுதும் இருந்துவந்த பக்தர்களின் திருக்கூட்டம்
சார்ந்திருக்கும் படிகாக்கும் சோலைவன ஆண்டவரே!

ஐயா உன் னடிபோற்றி அனுதினமும் வணங்குகின்றோம்
வையகத்தைக் காப்பாற்ற வந்தருள வேண்டுகிறோம்
அழைத்தவுடன் வரும்சோலை ஆண்டவரே! என்வாழ்வில்
செழித்தருள மகிழ்ந்திருக்கச் சீரருளைப் பொழிந்தருள்க.

## சன்னாசி பாமாலை

தேவி வரதராஜா, கொத்தரி

சன்னாசி என்று ஒரு தெய்வம் - அது
சகல போகங்களும் தருகின்ற தெய்வம்
சித்திரை மாதத்தில் கூடி - தினமும்
அழைப்பார்கள் மக்களும் அன்பாக வேண்டி
பலகோடி வரங்களும் கேட்கின்ற மக்களுக்கு
வல்லவனாய் தருகின்ற வளமான தெய்வம்
காவி உடையணிந்து வருவாய் - அதை
காணக் காணப் பேரானந்தம் பெறுவார்
கழுத்திலே மாலையும் அணிந்து
கலகல என்று நடந்துமே வருவார்
பௌர்ணமி திங்களில் எல்லாம்
அந்த நிலவாக தெரிகின்ற சாமியும் அதுவே
அழைக்கின்ற நேரத்தில் என்றும்
அன்பாகச் சொல்லுகின்ற அய்யாவும் அவரே
பாலும் பழமும் வைத்து அதை
பார்த்தவுடன் பரவசமும் பெறுவார்.

## அருள்மிகு சோலையாண்டவன் துதி

### கே.ஆர். சீனிவாசன் (பாடல்கள்)

கொத்தரிச் சோலையாண் டவனின் - இரு
குரைகழல் சரணடைவோம் நலம் பெறுவோம் (கொத்தரி)

இத்தரை மீதினில் தெய்வம் - என
இருந்தாலும் பலகோடி இவன்போல உண்டோ
பத்தரை மாற்றுப் பொன் உள்ளம் - இந்தப்
பாரெலாம் புகழ்வீசும் அருட்ஜோதி வெள்ளம் (கொத்தரி)

அன்பர்கள் துயர் நீங்க வேண்டி - ஐயன்
அருள்நாடி மனமார அவன்பாதம் தொழுதால்
இன்பம்வந் தெய்துதல் உறுதி - இனி
என்றென்றும் அவன்நாமம் ஏத்துவோம் பாடி (கொத்தரி)

பொல்லாத பகைவரின் தீமை - அன்பர்
பொறுக்க ஒண்ணாது புலம்பிடும் போது
வெல்லும் வழிகாட்டித் துணையாய் - வந்து
விளங்கிடுவான் சோலையாண்டிடும் விமலன் (கொத்தரி)

வறுமையும் நோய்களும் வாட்டி - நம்
மனம்நொந்து உள்ளன்பாய் வேண்டி வணங்கப்
பொறுமைகொள் அருள் சோலையப்பன்
புகழ்தோன்ற உதவிக்கு ஓடோடி வருவான் (கொத்தரி)

கொத்தரி நாலுகரை நாட்டார் - அப்பன்
குறையாத மெய்யருள் கொண்டாடி வாழ்வார்
சொத்து நமக்கவன் அருளே - அன்றித்
துணை வேறு ஏதுமில்லை என்றே மகிழ்வார் (கொத்தரி)

## கொத்தரி அருள்மிகு சோலையாண்டவர் வாழ்த்துப் பாடல்கள்

கணபதியைப் போற்றிக் கடம்பனடி போற்றி
மணச்சோலை யப்பனருள் வாழ்த்து

சீர்வளர் பாண்டி நாட்டைச் சேர்ந்தகொத் தரியில் மேவும்
தார்அணி ஐயன் சோலை யாண்டவன் பாதம் போற்றிப்
பார்மிசை அறங்கள் நாட்டிப் பாங்குடன் காக்கும் அன்பர்
கார்இருள் மாயை நீங்கிக் காண்பர்பே ரின்ப வாழ்வே 1

அங்குசம் கையில் ஏந்தி அபயமும் வரமும் தந்து
பொங்குமும் மதங்கொள் யானை பொற்புடன் ஊர்ந்த செல்வன்
தங்கெழில் சோலை யாளும் தகைஅரி ஹரனார் மைந்தன்
பங்கயப் பாதம் போற்றிப் பரவுவார் உய்கு வாரே. 2

வேண்டிய நல்கும் வள்ளல் மேவிய பரிவா ரங்கள்
தாண்டவக் காளி, பெரிய கருப்பர், நற்சந் நியாசி,
ஈண்டிய பதினென் படியான், கன்னியர் எழுவர் காத்தான்
ஆண்டசெம் முனிவர், பிரம ராயர், சாத்தப் பனாரே! 3

சோலையாள் தரும சாஸ்தா துயர்களை நீக்கிக் காக்கும்
மாலையார் மார்பன் என்று மாண்புடன் அழைக்கும் ஐயன்
வேலைசூழ் உலகில் மூத்த குறும்பர்கள் தெய்வ மாகிப்
பாலைய நாட்டார் வாழ்வைப் பாங்குடன் காப்பார் போற்றி! 4

அரிஹரன் மைந்த னாகி அகிலமும் போற்றும் தேவன்
பரிவுடன் வணங்கும் தேவர் பகையறத் தீர்த்த தீரன்
கரியினை ஊர்தி யாக்கிக் காசினி காக்கும் வீரன்
உரியகொத் தடிமை பூண்டார் உளத்தினித் திருப்பார் மாதோ 5

தூய்மையாம் பிரமச் சாரி தோற்றமே சோலை யாண்டான்
வாய்மையாய் வணங்குவோர்க்கு வாய்த்தவோர் அரிய தெய்வம்
நேயமாய்வேண்டு வோர்க்கு நிறைந்த பொன் பொருளின் போகம்
சேய்களும் திகழத் தந்து செழிப்புடன் உய்பிப் பானே 6

பொறுமைகொள் சோலை யப்பன் பூங்கழல் போற்று வோர்கள்
செறுபகை யழித்துக் காவல் செய்தெந்த நேரத் தேனும்
வறுமையைப் போக்கிச் செல்வ வாழ்வுடன் மகிழ்ச்சி நல்கி
மறுவிலாத் துணையைச் சேர்த்து மணம்பெற அருள் செய்வோனே! 7

பல்மரச் சொலையப்பன் பதமலர் வணங்கு வோர்கள்
தொல்லையாம் நோய்கள் நீங்கித் தூய நல் றைங்கள் செய்து
இல்லறச் சோலை சார்ந்து பொருளுடன் இன்பம் பெற்ற
நல்லவர், வல்லோர் என்னும் நற்புகழ் கொண்டுய் வாரே. 8

கொத்தரிச் சோலையப்பன் குரைகழல் அடிமை பூண்டார்
இத்தரைச் செல்வம் யாவும் இன்புடன் நாளும் துய்த்துப்
புத்திரப் பேறு பெற்று புகழ்பெற்று மகிழ்ச்சி பொங்கிச்
சித்திகள் யாவும் பெற்றுச் சிறப்புறத் திகழு வாரே! 9

கொங்கலர் சோலை மேவும் கொத்தரி ஐயன் பாதம்
எங்கிருந் தெண்ணி னாலும் இமைக்குமுன் துணையாய் வந்து
சங்கடம் தீர்த்து நெஞ்சில் தைரியம் தோன்றச் செய்து
பொங்குநற் செல்வம், ஞானம் பூத்திடும் வாழ்வும் ஈவான் 10

வாழியே! சோலை யாளும் வள்ளலார் அருளும் வாழி!
வாழியே தொண்டர் ஆற்றும் வளர்பணி நலமே யாண்டும்
வாழியே விழாக்கள், பூசை, மங்கலம் நிறைந்தெந் நாளும்
வாழியே பக்த கோடி மரபெலாம் வாழி! வாழி 11

கொத்தரிப் பூஞ்சோலைகளில் குடிகொண்ட தெய்வம்
கொண்டாடும் அடியார்கள் குறைதீர்க்கும் தெய்வம்
எத்திசையும் புகழ்மணக்கும் ஏற்றமிகு தெய்வம்
ஏற்பவர்கள் வேண்டுவரம் இனிதளிக்கும் தெய்வம்
புத்திரப் பேறருளுகிற புனிதமான தெய்வம்
புதுமையாக அரி, ஹரற்குப் புத்திரனாம் தெய்வம்
சொத்தி(து) எனப் போற்றுபவர் துணையாகும் தெய்வம்
சோலையாண்டவன் நமக்குத் தொன்மையான தெய்வம் 12

## அருள்மிகு சோலையாண்டவர் குறைதீர் பதிகம்

ஒளிர் சோலையாண்டவன் ஒன்புகழைப்
பாடக் களிற்று முகக் கடவுள் காப்பு!

1. இன்பம் விழைந்திடும் ஏழையேன் பற்பல
இடையூறு எய்துகின்றேன்
இனியேனு முன்கடைக் கண்ணினால் எளியனை
இனிதுடன் நோக்கி ஐயா
துன்பம் மறைந்துளத் தூய்மை நிறைந்திடத்
தொல்புவி மாயை யகலத்
தொண்டனாய் உன்புகழ் எங்கம் பரப்பிடத்
தூண்டுதல் செய்தென்னையும்
மென்புடை நெஞ்சமும் மேதகு உண்மையும்
விரிவான கொடையுள்ளமும்
மேதினி போற்றிட யான்பெறச் செய்குவாய்
மேலான தேவ தேவா
அன்புடன் உன்கழல் போற்றுவோர் வளமுடன்
அவனியில் வாழவைத்து
அருள்செயும் வள்ளலே! கொத்தரிச் சோலை
ஆண்டவா! ஐயப்பனே!

2. பண்டையோர் கூறுமுன் அற்புதக் கதைகளைப்
பணிவுடன் நான் நம்புவேன்
பரிந்து வந்துதவுவாய் என்றுனை வேண்டிடப்
பரிகசித் தெள்ளுவாயோ?
கண்டுளம் பொங்கியும் கண்ணீர் உகுத்(து) யான்
கரையிலாப் பத்திசெய்தும்
கடுகள வாயினும் தயவுடன் என்னைநீ
கருதாத தென்ன ஐயா?
எண்டிசை போற்றிடச் சேவகம் காட்டுவாய்
எளியனுக் கிரங்கி டாயோ?
ஈதுனக் கெளிதலால் அரியதோ என்னிடர்
இன்னுமே நீக்காத தேன்?
அண்டர்கள் பணிசெயும் தேவனே என்பகை
அழித்துடன் காக்க வருவாய்
அருள் செயும் வள்ளலே கொத்தரிச் சோலை
ஆண்டவா ஐயப்பனே?

3. பழகுசெந் தமிழிலே பாடியுன் புகழினைப்
பாரெல்லாம் பரவ வைத்துப்
பக்தர்கள் பலகோடி நித்தமும் வழிபடப்
பலனுடன் கை கூடுமே
கழனிகள் நடுவினில் காவல் புரிந்து என்
கலிதீர்க்க வந்த தேவா
கருணையைக் காட்டிஎன் கவலைகள் ஓட்டுவாய்
கற்பகத் தருவா குவாய்
மழவிடை வாகனன் மையலால் தோன்றிய
மாபெரும் ஆற்ற லுடையாய்
மைந்தனது கோரிக்கை யாவும் பலித்திட
வரமளித் தாதரிப் பாய்
அழகான மோகினி பெற்றநற் செல்வனே
அடியனேன் குறை நீக்குவாய்
அருள்செயும் வள்ளலே கொத்தரிச் சோலை
ஆண்டவா ஐயப்பனே!

4. செல்வங்கள் பலகோடி சேர்ந்தாலும் உந்தனது
திருவருட் கிணையாகுமோ?
தீராத வினைகளைத் தீர்க்கு முன்னளந்த
செல்வத்தி னாலாகு மோ

கல்வியாம் ஒண்பொருள் கடலாய் நிரப்பியுன்
கழலிணை போற்றாவிடில்
கல்வியால் பயனேது மில்லை எக்காரியம்
கடவுள் நீயன்றி முடியும்?
பல்வித வுணர்ச்சிகள் வாட்டிட ஏழையேன்
பதறியே வாழ்தல் நன்றோ?
பண்பிலார் மந்திரத் தேவல்கள் என்மிசைப்
பலியாது பாதுகாத்து
அல்லும் பகலும் உன் அடைக்கலம் என்பேனை
ஆதரித் தாண்டு கொள்வாய்
அருள்செயும் வள்ளலே கொத்தரிச் சோலை
ஆண்டவா ஐயப்பனே!

5. பொற்புறு சுற்றமும் நட்பினர் சூழலும்
பொங்குங் களிப்பி னோடு
புவிமீது இல்லறம் போற்றிப் புரிந்திடப்
புண்ணியம் செய்தி லேனோ?
நற்குணத் துணையுடன் நலமிகு மைந்தரும்
நாடியே உனையண்டினேன்
நகரத்து வேதனை தந்தெனை வாட்டுதல்
நண்ணும் உன் விளையாடலோ?
தற்பரன் உன்னையே சரணம் புகுந்தபின்
தமியனது பகையை மாற்றி
சாந்தியும் இன்பமும் தந்து காவாமையுன்
தகுதிக் கிழுக் காகும்!
அற்புத மேவுமுன் பற்பல விந்தைகள்
அகிலம் வியந்து பேசும்
அருள்செயும் வள்ளலே கொத்தரிச் சோலை
ஆண்டவா ஐயப்பனே!

6. தண்ணளி பொங்குமுன் சரணம் புகுந்தனன்
சங்கடத்தில் வாடலும்
தன்மான மின்றியே கயவர்க் கடங்கிநற்
றகையறு செயலாற்றலும்
கண்ணினாற் கண்டுநீ வாளா விருத்தலுன்
கண்ணியப் பெருமையாமோ
கடவுளே நின்திறன் காட்டியென் பகைதனைக்
கடிதே யழிக்க வருவாய்

விண்ணவர் போற்றிடும் வீரனே என்மன
வேதனை போக்கு என்று
வேண்டினேன் பன்முறை வேண்டுதல் யாவையும்
வீண்எனச் செய்கு வாயோ?
அண்ணலே! இன்னமும் தாமதம் இன்றிஎன்
ஆற்றொணாத் துயர் நீக்குவாய்
அருள்செயும் வள்ளலே கொத்தரிச் சோலை
ஆண்டவா ஐயப்பனே!

7. மறந்தவர்க் குணர்த்தியுன் காணிக்கை வாங்குவாய்
மறப்பதோ என் வேண்டுதல்?
மறவாது நின்புகழ் பாடுவேன் மனமிசை
வஞ்சகம் ஏது மின்றி
சிறந்த மெய்த் தெய்வமே தெவ்வரை மாட்டியே
தேவரை வாழவைக்கும்
சிவஞான இன்பமே அன்பர்தம் சேய்களைத்
திறமுடன் காப்பாற்று வாய்
மறந்தனை மாய்வித்து மாநில மெங்கணும்
வாய்மையே மேவ வைப்பாய்
மன்னிய அடியவர் மாபெருங் கூட்டமுன்
மகிமையைப் போற்று மாறு
அறந்தனை நாட்டியே ஆருயிர் யாவையும்
அமைதியாயுன்னை நாட
அருள் செய்யும் வள்ளலே கொத்தரிச் சோலை
ஆண்டவா ஐயப்பனே!

8. தஞ்சம் எனக்கு நீ தர்மசாஸ்தா எனத்
தக்கவர் கொண்டாடிடத்
தகைமிகும் அரிஹர மைந்தன் என்றே உனைத்
தாரணி போற்றி வாழும்
வஞ்சகம் செய்பவர் வளமுடன் வாழ்ந்திட
மாசிலா உனதடியவன்
வாதனை மிஞ்சிடும் வேதனை சேர்ந்திடல்
மாயமோ இது நியாயமோ?
கொஞ்சமும் என்னிடம் தயைபுரிய வில்லையென்
குறை கண்டு செயும் மோனமோ?

குற்றம் புரிந்துளேன் ஆயினும் உன்னிரு
குரை கழல் சரணானதால்
அஞ்சல் என் றெந்தனை ஆசிகள் கூறியே
அரவணைக்கக் கோரினேன்
அருள்செயும் வள்ளலே கொத்தரிச் சோலை
ஆண்டவா ஐயப்பனே!

9. நாரணன் தன்னிடம் நான்முகன் கொண்டுமே
நாரியாய் உனையீன்றதால்
ஞாலத்தினுயிரெலாம் உன்படைப் பன்றியே
நாளும் புரத்தல் நீயே
பூரணன் சிவனுமுன் தந்தையே யாதலால்
புகழ் மோட்சமுன் கையிலே
பொற்புறும் மும்மூர்த்தி ஆற்றலும் உன்னிடம்
பொருந்திடல் புதுமை யன்றே
வாரண முகனுடன் பாரணத் துவசனும்
மன்னுமுன் தமையன்களே!
மாநில மீதவர் துணையுடன் உன்திரு
மகிமையும் பெரிதாகுமே
ஆரணம் போற்றிடும் அண்ணலே ஆசிதந்(து)
அடியனுக் கபய மீந்து
அருள்செயும் வள்ளலே கொத்தரிச் சோலை
ஆண்டாவ ஐயப்பனே!

10. போற்றிக் குறும்பர்கள் நாடொறும் பூசித்துன்
பூங்கழல் பணி பூண்டனர்
புரையிலா மணிதன வணிகர் ஊராருடன்
பொற்புறும் தொண்டாற்றுவர்
காற்றில் அலைந்திடும் தூசுபோல் என்மனம்
கலங்கித் தவித்திடாது
காவல் புரிந்திடக் காட்சி தந்தே பரப்பலால்
நவகோளும் நண்பராகி
நாளெலாம் பணி சீநிவாசன் மகிழ்ந்திடும்
நலமே வளர்ந் தோங்கிட
ஆற்றிடுந் தவமாக உன்னை வணங்கிடும்
ஆர்வமே பெருக நாளும்
அருள்செயும் வள்ளலே கொத்தரிச் சோலை
ஆண்டவா ஐயப்பனே!

# சோதனை தீர்க்கும் சோலையாண்டவா



சண்முகக்கவிமணி சோலை. இராமச்சந்திரன்

சோலை ஆண்டவா சுந்தர நாயகா
சோதனை போக்கும் எந்தன் தாயகா
ஆலையிற் கரும்பாய் அல்லற் படுவோர்
அனுதினம் உன்னை வணங்கிடக் காக்கும் (சோலை)

பாலைய நாட்டு அய்யனா ரனைவரில்
பால்ய சகோதரன் பவ்ய வசீகரன்
சோலைகள் வாவிகள் சூழ அமைந்த
சுந்தரக் கொத்தரி வாழும் மனோகரன் (சோலை)

வேலைப் பிடித்த வித்தகன் சோதரா
வேதனை போக்கும் பாப விமோசனா
தாளைப் பணிந்தோம் காப்பாய் அய்யனே
சற்றே இரங்கி வருவாய் மெய்யனே (சோலை)

பூதலத்து மக்களுக்கு புண்ணியம் சேர்க்க
புரவியேறி காப்பவனே சோலை ஆண்டவா
பேதலித்த மக்களுக்கு பெருந்துணை யாவாய்
பேதமின்றி காப்பவனே சோலை ஆண்டவா (சோலை)

வாரத்தில் வெள்ளி திங்கள் இருநாள்
வந்துனை வணங்கிட வருவோர் கூட்டம்
ஆரத்தி மாவிளக்கு, அரிவையர் அணிவகுப்பு
அருள்தரும் உன்னடி வணங்கி மகிழ்வார் (சோலை)

காலத்தின் வேகமோ கருத்தை மாற்றுதே
கயவர்கள் கூட்டமோ களித்து தூற்றுதே
ஞாலத்தில் நீதியும் நேர்மையும் நிலைத்திட
சோலைவள் அய்யனே உன்துணை வேண்டுவோம் (சோலை)

சோலைவிளத் தையனெனும் சோலைவள் ஆண்டவா
கோலமிகு ஐயப்பன் திருஉருவைக் கொண்டவா
பாலைவிளத் தய்னவன் பாசமிகு சோதரா
பாவவினை பட்டொழிய பக்தர்களை காப்பவனே (சோலை)

# வாழுவோம்

சண்முகக்கவிமணி புலவர் இராம. வீரப்பன்



சோலை சோலை சோலையென்றே
சுந்தரனைப் பாடுவோம்
காலைக்கையை நாம் உழைத்தே
காசினியில் வாழுவோம் (சோலை)

அய்யன் அய்யன் அய்யனென்றே
ஐயப்பனை நாடுவோம்
மெய்வியர்க்கப் பாடுபட்டு
மேதினியில் வாழுவோம் (சோலை)

யானை யானை யானையென்றே
அவன்வருகை நோக்குவோம்
பானைநல்லாச் சோறுபொங்க
பாடுபட்டு வாழுவோம் (சோலை)

குதிரை குதிரை குதிரையென்றே
குதிரைஎடுப்பு செய்குவோம்
புதிய நல்ல தொழில்களாலே
புவனந் தன்னில் வாழுவோம் (சோலை)

மாலை மாலை மாலையென்றே
மனமகிழ்ந்து சூட்டுவோம்
தோளை நல்ல உயர்த்திக் காட்டி
தெம்புடனே வாழுவோம் (சோலை)

சிட்டுச் சிட்டாய்க் கையை காட்டும்
சின்முத்திரை காணவோம்
கட்டுபட்ட வாழ்க்கையினால்
கவலையின்றி வாழுவோம் (சோலை)

இட்டுக்கட்டி துதிபாடி
இவனருளை வேண்டுவோம்
தட்டுப்பாடு இன்றி வாழ
சாமிதுணை வேண்டுவோம் (சோலை)



## சரணம் சரணமய்யா

### சண்முகக்கவிமணி சோலை. இராமச்சந்திரன்

சரணம் சரணமய்யா - சாமி
சரணம் சரணமய்யா
சிந்துதமிழ் பாடுகிறோம் சிங்கார - எங்கள்
திருச்சோலை ஆண்டவனே ஒய்யாரா (சரணம்)

புத்தம்பு தியபூவே
பூத்துக்குலுங்கும் ரோஜாப்பூவே
புன்சிரிப்பு மயங்குதய்யா சிங்கார - இங்கு
உன்சிரிப்பு இழுக்குதய்யா ஒய்யாரா (சரணம்)

கலையாம் கலையழகே
காலையிளங் கதிரழகே
கந்தனவன் தம்பியான சிங்காரா - நல்ல
சுந்தரனே சோலைவளர் ஒய்யாரா (சரணம்)

மாலையணி மார்பழகா
மயக்கமிரு கண்ணழகா
பொன்னழகே என்னழகு சிங்காரா - நல்ல
வெண்புரவி வாகனனே ஒய்யாரா (சரணம்)

பாதச் சிலம்பழகு
பளபளக்கும் கலையழகு
பாடுதய்யா தாளத்தோடு சங்கீதம் - உனைப்
பார்த்தவுடன் ஆடுதய்யா ஒய்யாரா (சரணம்)

நீறுபூத்த நெற்றியிலே
சீறுபூத்த சந்தனமும்
குங்குமமும் குலுங்குதய்யா முன்னாலே - உன்னை
கும்பிடவே விரும்புதய்யா தன்னாலே (சரணம்)

தங்க மணிமகுடம்
எங்கும் ஜொலி ஜொலிக்கும்
மரகதமே மாணிக்கமே சிங்காரா - நல்ல
மங்களஞ்சேர் சோலைவளர் ஒய்யாரா (சரணம்)

# அய்யனய்யன்

## சண்முகக்கவிமணி புலவர் இராம. வீரப்பன் பாடல்கள்

பார்த்தால் அய்யனையே பார்க்க வேண்டும்
பாடினால் அவன்புகழே பாட வேண்டும்
சார்ந்தால் சோலையனைச் சார வேண்டும்
சகலருமே நன்றாக வாழவேண்டும்



கூடினால் கொத்தரியில் கூட வேண்டும்
கும்பிட்டால் குறையெல்லாம் தீர்ந்து போகும்
ஆடினால் காவடியொடு ஆட வேண்டும்
அவனருளே எந்நாளும் நாட வேண்டும்

கேட்டால் சரணகீதம் கேட்க வேண்டும்
கிளம்பினால் சந்நதியில் நிற்க வேண்டும்
போட்டால் புஷ்பங்களைப் போட வேண்டும்
பொன்னான திருவடியைத் தேட வேண்டும்

பேசினால் அவன்நாமம் பேச வேண்டும்
பேசாமல் மனத்திலும் எண்ண வேண்டும்
பூசினால் திருநீறே பூச வேண்டும்
பொய்கையிலே எந்நாளும் குளிக்க வேண்டும்

எழுதினால் பக்தியாக எழுத வேண்டும்
ஏடெல்லாம் அவனுக்காய் இருக்க வேண்டும்
தொழுதால் அவனடியே தொழ வேண்டும்
துன்பமெலாம் நம்மைவிட்டு ஓட வேண்டும்

அன்னதானம் நன்றாகச் செய்ய வேண்டும்
அய்யனய்யன் என்றுதினம் பாட வேண்டும்
சின்னச்சின்ன காவடிகள் கட்ட வேண்டும்
சிறுவரினை இறைப்பணியில் கூட்ட வேண்டும்

## சோலையப்பன் புகழைப் பாடுவோம்

சொல்லெடுத்து ஏட்டில் வைத்து
சுந்தரமாய்ப் பாட்ட மைத்து
சோலையப்பன் புகழைப் பாடுவோம் (சொல்)

பாலெடுத்துப் பூசை செய்து
பணிவோடு வணங்கி நின்று
பரந்தாமன் விருத்தம் பாடுவோம் (சொல்)

தேனெடுத்துப் பூசை செய்து
தேகத்தை ஒடுக்கி நின்று
தேவனவன் புகழைப் பாடுவோம் (சொல்)

பழமெடுத்துப் பூசை செய்து
பக்தியோடு சூடம் ஏற்றி
பகிர்ந்து வாழக் கற்றுக் கொள்ளுவோம் (சொல்)

பூவெடுத்து மாலை கட்டி
பொன்னடியை நெஞ்சில் வைத்து
புண்ணியனின் புகழைப் பாடுவோம் (சொல்)

அர்ச்சனைகள் நன்கு செய்து
அய்யனாரை நெஞ்சில் வைத்து
அன்புடனே ஒன்றாய்க் கூடுவோம் (சொல்)

கையெடுத்து தாளம் போட்டு
காலெடுத்து ஆட்டம் போட்டு
கன்னித்தமிழ் பாட்டுப் பாடுவோம் (சொல்)

காவடியைக் கட்டி வைத்து
காலெடுத்து நடையைக் கட்டி
காசினியில் உயர்ந்து வாழுவோம் (சொல்)

## அய்யன் சோலை அய்யனடா

அய்யன் சோலை அய்யனடா - அவன்
அன்பரைக் காத்திடும் மெய்யனடா
தெய்வம் போற்றிடும் சீலனடா - அவன்
தீமைகள் போக்கிடும் பாலனடா (அய்யன்)

காவடி ஆட்டத்தை ரசிப்பவனாம் - நம்
கருத்துள் என்றும் வசிப்பவனாம்
பூவடி போற்றி வணங்கிடுவோம் - இந்தப்
புண்ணியப் பணிக்கு இணங்கிடுவோம் (அய்யன்)

நாட்டை நகரைக் காக்க வந்தான் - அவன்
நன்மைகள் எல்லாம் ஆக்கவந்தான்
கேட்டைத் தீர்க்கத் தீயாவான் - நாம்
கேவி அழுதால் தாயாவான் (அய்யன்)

பள்ளத் தூரைச் சார்ந்திருந்தே - அவன்
பாரைக் காக்க அமர்ந்தவனாம்
உள்ளத்தில் பக்தியில் ஒன்றிடுவான் - நம்
ஊறுகள் யாவையும் வென்றிடுவான் (அய்யன்)

கொத்தரிச் சீமையின் திருவிளக்கே - எங்கள்
குறைகளைப் போக்கிடும் ஒளிவிளக்கே
முத்தே மணியே மரகதமே - நல்ல
மோகன ரூப அற்புதமே (அய்யன்)

பயிரைக் காக்க மழையாவாய் - எம்
பண்பைக் காட்ட மலையாவாய்
உயிரைக் காக்கும் உத்தமனே - இந்த
உலகே உன்சின் முத்திரையே! (அய்யன்)

## சிஞ்சாப் போடுங்க



சிஞ்சிக்கா சினுக்குச் சிங்கா சிஞ்சாப் போடுங்க
சிங்காரச் சோலையனின் சொந்தம் பாடுங்க

பிள்ளையார் சாமிக்கு உக்கி போடுங்க
பேயான தீக்குணத்தைத் தூக்கிப் போடுங்க
கொல்லங் காளியைச் சுற்றி வாருங்க
குறைவில்லாக் கல்வியைக் கற்று வாருங்க

பதினெட்டாம் படியோனைப் பார்த்து நில்லுங்க
பஞ்சத்தையும் லஞ்சத்தையும் ஆர்த்து வெல்லுங்க
நதிபோன்ற கன்னிமாரை நன்று பாடுங்க
நானென்னும் அகந்தையினைக் கொன்று போடுங்க

அடைக்கலம் காத்தாரிடம் அடைக்கல மாவோம்
அய்யனாரின் புகழ்பாட நடையைப் போடுவோம்
தடைக்கல்லை ஒற்றுமையால் தகர்த்துப் போடுவோம்
தமிழ்க்கல்லை பட்டைதீட்டி வளர்த்துப் போடுவோம்

முனியப்பா மீசையோ முறுக்கி ஆடுது
மூத்தோரை மதிக்கச் சொல்லி முறுவல் போடுது
கனிவோடு பிர்மசாமி காட்சி கொடுக்குது
கற்பூர ஜோதியிலே எல்லாம் தெரியுது

சன்னாசி சாமியுமே என்னைப் பார்க்குது
சஞ்சலத்தை விரட்டவே கையைத் தூக்குது
முன்குடுமி கருப்பையா கோபக் காரன்
முடிச்சுப் போடும் கூட்டத்துக்கு சாபக் காரன்

நாட்டிலே மும்மாரி பெய்யவும் வேண்டும்
நல்லதமிழ் கவிஞர்கள் உய்யவும் வேண்டும்
பாட்டெல்லாம் சோலைபுகழ் பாடவும் வேண்டும்
பண்போடு நாமெல்லாம் கூடவும் வேண்டும்

## அய்யனே - மெய்யனே

ஆனைமுகன் தம்பியான அய்யனே - எம்மை
அதரித்துக் காத்திடுவாய் மெய்யனே
பானையிலே பொங்கலிட்டோம் அய்யனே - நல்ல
பயிர்வளரத் துணைசெய்வாய் மெய்யனே (ஆனை)

குயில்பாடும் சோலையப்ப அய்யனே - எங்கள்
குலம்பாட வாழ்வளிப்பாய் மெய்யனே
மயிலாடும் சோலையப்ப அய்யனே - எங்கள்
மண்செழிக்க மழைபொழிவாய் மெய்யனே (ஆனை)

சிவன்ராத்திரிக் காவடியில் அய்யனே - நீயும்
சிரித்துவாழும் பேரழகு மெய்யனே
உவமை உனக்கில்லை அய்யனே - இந்த
உலகமே உன்கையில் மெய்யனே (ஆனை)

கூத்தாடி மகிழவைப்போம் அய்யனே - நீயும்
கும்பிட்டார் குறைதீர்க்கு மெய்யனே
பூத்தொடுத்தோம் பாத்தொடுத்தோம் அய்யனே - உந்தன்
பொன்னடியைப் பார்த்துநிற்போம் மெய்யனே (ஆனை)

வெண்புரவி ஏறிவரும் அய்யனே - எம்மை
கண்கலங்க வைக்காதே மெய்யனே
எண்ணோடு எழுத்தான அய்யனே - நீயும்
பண்ணோடு பாவாவாய் மெய்யனே (ஆனை)

ஆலைகளைச் சாலைகளை அய்யனே - நீயும்
அலைகடலாய்ப் பெருக்கிடுவாய் மெய்யனே
பாலைய நாட்டில் வாழும் அய்யனே - எங்கள்
பக்க துணையிருப்பாய் மெய்யனே! (ஆனை)

## கலியுக வரதன்

புலவர் மாமணி **மா. முத்துராமன்**

கலியுக வரதனே கண்கண்ட தெய்வமே
கருணைக் கடலே! காருண்ய மூர்த்தியே
ஹரிகர புத்தினே காரிருள் நீக்குவோனே
கலைஎழில் சோலையில் அமர்ந்த கடவுளே
கன்னல் தமிழாக காலமெலாம் உன்னை
கவியாலே பாடினோம் காப்பாய் எம்மையே.

# ஸ்ரீ சோலை ஆண்டவர் ஆனந்தக் களிப்பு

காவடிச்சிந்து

சண்முகக்கவிமணி சோலை. இராமச்சந்திரன்

தானத நாதந்த னானா – தன
தானத நாதந்த நாதந்த னானா

1. சீர்மேவும் கொத்தரியில் வாழும் -திரு
சோலைவளர் அய்யனவன் மீதிலென் நாளும்

2. பார்புகழ வேதுதிகள் பாட - பக்தர்
பணிந்துனக்கு கொண்டுவரும் காவடிக லாட

3. கணபதியே காத்திடுவாய் நன்றே - தம்பி
கந்தனவன் தாள்பணிந்தோம் வந்திடுவாய் இன்றே

4. குணவதியே கொற்றவையே காளி - என்
குலதெய்வம் அனைவருமே வந்தருள் பாலி

5. சோலைவளர் தூயவனே அய்யா - உன்னை
துதிப்போர்க்கு சோதனைகள் வாராதே மெய்யா

6. காலையிளங் கதிவனின் காட்சி - உன்
கனிவான முகத்தினிலே தோன்றுதய்யா மாட்சி

7. பூவான தோற்றமது கண்டு - உன்
புன்னகையில் மயங்குகிறோம் பக்திமிகக் கொண்டு

8. காவான சூழ்நிலையில் நின்று - எம்
கலிநீக்கி எனைநோக்கி ஆளுவது மென்று

9. சிவனாரும் மோகித்த போது - நீ
சீராக வந்துதித்த செய்தியினை ஓது

10. கொத்தரிக் கிராமத்தில் வாழும் - அன்பர்
காவடியாய் காணிக்கை தந்தோமெந் நாளும்

11. தவக்கோலம் கொண்டபடி காட்சி - தந்து
தரணியெலாம் ஆளுகின்ற உந்தனது மாட்சி

12. வாவிக்கரை ஓரத்திலே நின்று - வாடி
வருவோர்க்கு வாழியென அருள்புரிவாய் இன்று

13. பாவிகளும் பயனடைய என்று - உன்
பால்முகத்தால் பாவங்களை போக்கிடுவாய் நன்று

14. சிவனோடு சேர்ந்ததிரு சீலன் - அந்த
சீவன்நிறை சக்திபெற்ற சிவஜோதி பாலன்

15. பவபயங்கள் போக்குகின்ற மெய்யன் - சிவ
ராத்திரியில் திருவிளங்க தோன்றுகிற அய்யன்

16. கரந்தபசும் பால்பழம்பன் னீரு - தூய
மல்லியொடு இளநீரு பஞ்சாமிர்தச் சாறு

17. தரவேண்டி தாபமொடு ஓடி - தோளில்
தாங்கிவந்தோம் காவடிகள் கால்வலிக்க ஆடி

18. கொத்தரிக் கிராமத்தில் வாழும் - அன்பர்
காவடியாய் காணிக்கை தந்தோமெந் நாளும்

19. உன்னருகே உன்மாதா காளி - உலகு
உய்திடவே வரமருளும் உமையவளாம் நீலி

20. கண்போலக் காத்திடவே கருப்பர் - ஏழு
கன்னியரும் பிரமய்யா முனீஸ்வரனும் இருப்பர்

21. சந்நாசிக் கோலத்திலே தம்பி - துணையாக
இருக்கின்ற காலத்திலே எல்லோரையும் நம்பி

22. எந்நாளும் இடரில்லை என்று - இரு
பாலாரும் பாடிவாரார் உனைநாடி இன்று

23. சர்க்கரையும் முக்கனியும் கொண்டு - நல்ல
சந்தனமும் பன்னீரும் ஜவ்வாதுகளும் உண்டு

24. தக்கபடி சீர்வரிசை கொண்டு - தளிர்
தண்மலரால் மாலைகளும் தேங்காய்பழம் உண்டு

25. நாதஸ்வர மேளங்களும் ஒலிக்க - நாங்கள்
ராகமொடு பாடல்களும் குரவைகளும் முழங்க

26. வேதவடி வானவனே அய்யா - நாங்கள்
விரும்பியுனை நாடிவாரோம் சோலைவளர் மெய்யா

27. கொத்தரிக் கிராமத்தில் வாழும் - அன்பர்
காவடியாய் காணிக்கை தந்தோமெந் நாளும்

28. பச்சைமயில் தோகையது சேர்த்து - பசும்
பட்டாலே பன்னாங்கு பக்குவமாய் யாத்து

29. ஒச்சமிலா சந்தனம ரத்தில் - உயிர்
ஒப்பற்ற சிற்பங்களை செதுக்கியர தத்தில்

30. காவடிகள் செப்பமுடன் செய்து - காலை
கள்ஊறு கவின்மலர்கள் மாலையெனக் கொய்து

31. சேவடிகள் தேடியிங்கு வந்தோம் - சிறு
குறையேது மில்லாது கொண்டிடுவாய் தந்தோம்

32. கொத்தரிக் கிராமத்தில் வாழும் - அன்பர்
காவடியாய் காணிக்கை தந்தோமெந் நாளும்

33. நல்லதை மதிக்காத காலம் - இன்று
நயவஞ்ச கம்சூது மலிந்திட்ட கோலம்

34. நல்லவர்க் கென்றுமே ஓலம் - நன்றி
இல்லாதார் வாழ்கின்ற நயமான காலம்

35. காடாகு முன்னமே சாமி - நீர்
காப்பாத்த வல்லீரேல் தாங்காது பூமி

36. காடாளும் மிருகங்கள் எல்லாம் - இன்னும்
கையோங்கிப் போகாமல் கண்பாரும் நல்லா

37. நாடுநகர் நல்லவர்கள் வாழ - என்றும்
நல்லறங்கள் வளர்ந்தோங்கி எங்கனுமே சூழ

38. தேடுநிதி திரவியங்கள் பெறுக - என்றும்
சீராக வாழ்வினிலே நலம்யாவும் பெருக

39. வாடும்பயிர் வாட்டத்தையும் போக்கு - எங்கும்
வளமாக மழைபொழிய வந்திங்கு நோக்கு

40. ஓடும்நதி புனல்பெருக வாழ்த்து - உன்
ஓடைகுளம் ஏரிகளும் பொங்கிடவே காத்து

41. கொத்தரிக் கிராமத்தில் வாழும் - அன்பர்
காவடியாய் காணிக்கை தந்தோமெந் நாளும்

42. பட்டியெலாம் கால்நடைகள் மருக - தினம்
பால்வளமும் நால்வளமும் பாய்ந்துவந்து பெருக

43. முட்டமுட்ட மும்மாரி பொழிக - இங்கு
மூதேவி சேராமல் முற்றிலும் ஒழிக

44. அரிஅரனின் புத்திரனே அய்யா - ஆகாத
அனைத்தையுமே நீயொழித்துக் காப்பாத்து மெய்யா

45. வரிப்புலியின் மீதேறி வாவா - என்றும்
வளமாக வாழ்ந்திடவே வாழ்த்திவரம் தாதா

46. பள்ளத்தூர் கவிராமச் சந்திரன் - பாடும்
பாமாலைத் தலைவனிவன் பார்புகழும் அய்யன்

47. உள்ளத்தே உயர்சோலை அய்யன் - உலகு
உள்ளவரை உயர்ந்தோங்கி வாழ்ந்திடவே மெய்யன்

48. நல்லவரும் வல்லவரும் வாழி - நாளும்
நாடுநகர் பயிரினங்கள் உயரினங்கள் வாழி

49. சொல்லெடுத்துச் சொன்னவரும் வாழி - இதை
சந்தமொடு பாடியவர் கேட்வரும் வாழி

50. நல்லதமிழ் நாட்டார்கள் வாழி - நாளும்
நம்பனடி போற்றுகிற அனைவருமே வாழி

நாட்டார் நகரத்தார் வாழி - பாரத
நாட்டாரும், பக்தர்களும் பல்லாண்டு வாழி
எல்லோரும் இன்புற்று வாழி - இங்கு
இல்லாமை இல்லாமல் எழில் பெற்று வாழி

## சின்னச் சின்ன காவடி

சண்முகக்கவிமணி புலவர் **இராம. வீரப்பன் பாடல்கள்**

சின்னச் சின்னக் காவடி சோலையப்பன் காவடி
வண்ண வண்ணக் காவடி வாழ்வளிக்கும் காவடி (சின்ன)

ஆட்டம் ஆடும் காவடி அய்யனாரின் காவடி
பாட்டுப் பாடும் காவடி பாலைய நாட்டார் காவடி (சின்ன)

பழநிச்சாமி காவடி பஞ்சாமிர்தக் காவடி
சோலைச்சாமி காவடி சோறுபோடும் காவடி (சின்ன)

கானாட்டழன் காவடி கால்போட்டு ஆடுமாம்
நேமத்தான் காவடி நீடுபுகழ் காணுமாம் (சின்ன)

கொத்தரிக் காவடி கூடிக்கூடி ஆடுமாம்
பக்தரின் காவடி பாட்டுக்கேற்ப ஆடுமாம் (சின்ன)

ஆத்தாளின் காவடி ஆவேசக் காவடி
சாத்தையா காவடி சாந்தமான காவடி (சின்ன)

பட்டிக்காட்டுக் காவடி பக்திநலம் கொண்டதாம்
பட்டணத்துக் காவடி பாடிப்பாடி ஆடுமாம் (சின்ன)

## ஆடுக காவடி

ஆடுக காவடி ஆடுகவே அய்யன் காவடி ஆடுகவே
ஆடுக காவடி ஆடுகவே அய்யன் காவடி ஆடுகவே

1. கொத்தரி அய்யன் துணைநாடி
   குணமாய் விரதம் கைக்கொண்டு
   சத்தியம் காக்கப் புறப்பட்ட
   சர்க்கரைக் காவடி ஆடுகவே (ஆடுக)

2. சுதியும் பாட்டும் கூடிவர
   சோலையின் பக்தர்கள் ஆடிவர
   பதினெட்டாம் படியோன் துணைக்குவர
   பாலுக் காவடி ஆடுகவே (ஆ டுக)

3. சோலை ஆண்டவன் சந்நிதியில்
   சுந்தரத் தமிழைப் பாடுகையில்
   பாலை நிலமும் குளிருதய்யா
   பன்னீர்க் காவடி ஆடுகவே (ஆடுக)

4. சேமக் குதிரை தெரியுதய்யா
   க்ஷேத்திரப் புனிதம் மணக்குதய்யா
   நாமம் பலவும் நாம்பாட
   நம்புஷ்பக் காவடி ஆடுகவே (ஆடுக)

5. காட்டை இங்கு விறகாக்கி
   கடிய விரதம் உறவாக்கி
   ஆட்டம் போட்டுக் காணவந்த
   அக்கினிக் காவடி ஆடுகவே (ஆடுக)

6. ஆஸ்தான வேளார் அகம்மலர
   அபிஷேகப் புண்ணியம் காணுதற்கு
   சாஸ்தாவின் எல்லையில் மணம் வீசும்
   சந்தனக் காவடி ஆடுகவே (ஆடுக)

7. துன்பம் யாவும் போக்கிடவும்
   துடிப்பாய் நாங்களும் தொழில் செய்ய
   இன்பம் யாண்டும் நிலைபெறவே
   இளநிக் காவடி ஆடுகவே (ஆடுக)

## கும்பி

1. கொத்தரி அய்யனைப் பாடுங்கடி - நீங்க
   கும்மியும் கொட்டியே ஆடுங்கடி
   அத்தனை அமலனை எண்ணுங்கடி நீங்க
   ஆவலாய் அவனடி நண்ணுங்கடி

2. யானையின் மீதுமே வருவானடி - அவன்
   யாவர்க்கும் நன்மை தருவாண்டி
   தேனையும் பாலையும் ஊற்றுங்கடி - நீங்க
   தேவாதி தேவனைப் போற்றுங்கடி

3. மோதக வடையிலே அண்ணனடி - அவன்
   மோ்க வலையிலே மாமனடி
   தேவ வலையிலே அப்பனடி - நல்ல
   வேட்டை வலையிலே அய்யனடி

4. தன்னான தன்னான பாடுங்கடி - நீங்க
   தாளங்கள் மேளங்கள் போடுங்கடி
   கண்ணனின் மருமகனைச் சேருங்கடி - உங்க
   கவலைகள் தீர்ந்திடும் பாருங்கடி

5. மோகனப் புன்னகை தெரியுதடி - நல்ல
   மோட்ச வழியுமே புரியுதடி
   தாகமாய் அவனடி பற்றுங்கடி - அவன்
   தாமரைச் சேவடி சுற்றுங்கடி

6. பள்ளத்தூர் சீமையின் மன்னனவன் - அவன்
   பாடுகள் தீர்ப்பதில் கண்ணனவன்
   உள்ளத்தில் என்றும் குடியிருப்பான் - நாம்
   உண்மையாய் நம்பினால் படியளப்பான்

7. கழுத்தில் மாலையும் போட்டிருப்பான்
   கையினில் முத்திரை காட்டி நிற்பான்
   பழுத்த பழமாய் இனிப்பாண்டி - நம்
   பாடலைக் கேட்டே களிப்பாண்டி

8. காட்டுக்குள் மேட்டுக்குள் அவனிருப்பான் - நம்ம
   கண்மாய்க் கரையிலும் அவன் சிரிப்பான்
   வீட்டுக்குள் நாட்டுக்குள் அவனிருப்பான் - நம்ம
   வீரப்பன் பாட்டிலும் வீற்றிருப்பான்

# அருமை மிகுந்த அய்யனார் எழுவர்

**சண்முகக்கவிமணி சோலை. இராமச்சந்திரன்**

அய்யனார் அய்யனார் அருமை மிகுந்த அய்யனார்
அய்யனார் அய்யனார் பெருமை மிகுந்த அய்யனார்
பாலையநாட் டெல்லையிலே பலவிதமாய் காட்சிதந்து
சோலையெல்லாம் சூழ்ந்திருக்க வீற்றிருக்கும் அய்யனார் (அய்யனார்)

சித்திரைத் திங்களிலே சிலையெடுப்பு அய்யனார்
சிலையெடுக்க வழிநடத்தி தேர்ந்தெடுக்கும் அய்யனார்
தம்பிகளைத் தவறவிட்டுத் தவமிருந்த அய்யனார்
வெம்பிநோக்கி மேற்குபார்த்த பாலையூரின் (அய்யனார்)

ஓடக்கரை ஓரத்திலே ஓய்வெடுத்த அய்யனார்
ஓர்நொடியில் வெள்ளையனை வணங்கவைத்த அய்யனார்
கார்பெருக நீர்சிறக்கும் கருவியாண்ட அய்யனார்
பார்பெருக்க பயிர்வளர்க்கும் கரியப்பட்டி அய்யனார் (அய்யனார்)

வேழமீது ஏறிவந்து வீறுகொண்ட அய்யனார்
தாழ மரத்து நிழலிலே தங்கிவிட்ட அய்யனார்
சொன்னபடி செய்பவர்க்கு சுகமளித்துக் காத்திடும்
பன்னகுடி கல்லாங்குடி பார்த்திருக்கும் அய்யனார் (அய்யனார்)

மகிழமரத்து நிழலிலே மனங்குளிர்ந்த அய்யனார்
மக்களுக்கு வரமளித்து மகிழ்ந்திருக்கும் அய்யனார்
வாசவயல்கள் சூழ்ந்திருக்கும் நல்லவட குடியிலே
ஓசைமணிகாளி யுடன் நெல்லையாண்ட அய்யனார் (அய்யனார்)

வயல்நாச்சி துணையிருக்க தனதாட்சி நடத்தியே
செயலாட்சி சீராட்சி செய்துநிதம் காத்திடும்
கோலங்கொண்டு கொலுவிருந்து கும்பிடவே காத்திடும்
வேலங்குடி அய்யனார் வீறுகொண்ட அயயனார் (அய்யனார்)

வெள்ளையுள்ளங் கொண்டவன் கருப்பர்துணை கண்டவன்
வீரவேங்கை போலவே தூரநின்றே பாய்பவன்
உள்ளத்திலே நினைத்தவுடன் ஓடிவந்து காத்திடும்
பள்ளத்தூர் அய்யனார் பாலைவளர்த்த அய்யனார் (அய்யனார்)

காலையிளங் கதிரொளியே கண்ணிரண்டும் பேரொளியே
காலமெல்லாம் பிரமச்சாரி ஆனஇளைய அய்யனார்
இத்தரையை ஆட்சிசெய்யும் ஏற்றம் கொண்ட அய்யனார்
கொத்தரியில் கோயில்கொண்ட சோலைஆண்ட அய்யனார் (அய்யனார்)

## ஸ்ரீ சோலை ஆண்டவர் சுந்தரக் கும்மி



**சண்முகக்கவிமணி சோலை. இராமச்சந்திரன்**

ஆண்டவரே சோலை ஆண்டவரே - இந்த
அகில லோகமும் ஆண்டவரே
வேண்டிடும் பக்தர்கள் முக்திபெற - அவர்
வேண்டுதல் தந்திடு சக்திபெற (ஆண்டவரே)

நாயகனே நல்ல நாயகனே - இந்த
நாட்டாரைக் காத்திடும் நாயகனே
தாயில்லாச் சேய்போல தத்தளித்தே - நாங்கள்
தவிச்சு நிக்கிறோம் பேதளித்தே (ஆண்டவரே)

பிறவி இப்படி ஆனதுவோ - இல்லை
பெரு வினைகளும் சூழ்ந்ததுவோ
புரவி யேறிடும் புண்ணியனே - இந்த
பிள்ளையை காப்பாத்து கண்ணியனே (ஆண்டவரே)

சித்தரை முத்தேதி நாளினிலே - வெகு
சீராய் குளித்திட்டாய் பூவினிலே
இத்தரை மாந்தர்க ளெல்லோருமே - இங்கு
இன்பமாய் வாழ்ந்திடக் கண்பாருமே (ஆண்டவரே)

கொத்தரி வாழுமெய் அன்பருமே - உன்னை
கொலுவில் ஏத்தியே கும்பிடுவார்
பக்தியாய் பணிந்து பாடிடுவார் - அந்த
பத்துநா ளுமவர் கூடிடுவார் (ஆண்டவரே)

சோலைகள் சூழவே நீயிருந்து - தினம்
சொகுசு பூஜையும் உன்விருந்து
ஆலையில் கரும்பாய் நானிருந்து - நிதம்
அழைப்பதும் கேட்காதோ இங்கிருந்து (ஆண்டவரே)

சித்திரா பவுர்ணமி நாளினிலே - உன்
சேவைக்குப் புரவியும் வலம்வருமே
பத்தாம்நாள் விழாக்கோலம் கண்குளிரும் - உன்
பதமலர் பாடிட மனங்குளிம் (ஆண்டவரே)



## சோலையாண்டவர் துதிமாலை



(மு. அ. அண்ணாமலை)

அடியாரைக் காப்பவன் ஆண்டவன் சோலைமலை
ஆதரித்து, காப்பதை, அருளாகக் கொண்டவன்
இகபரத்தார்க்கு இன்பநிலை தன்னை வழங்குபவன்
ஈசனின் மகனாய் நின்றெல்லோர்க்கும் அருளுபவன்
உயிர்களுக்கு உணவு தந்து உத்தம வாழ்வு தருவோன்
ஊழ்வினையை நீக்கிவிட்ட உன்னத ஜோதி அவன்
எண்ணமெல்லாம் உயர்வாக எண்ணச்செய்து வைத்தோன்
ஏற்றவாழ்வு தந்து இன்புறச் செய்து வைத்தோன்
ஐயனுக்கு அய்யனாம் ஆண்டவன் சோலையப்பன்
ஒளிபெறும் வாழ்வை உணர்த்திக் காட்டியவன்
ஓம் எனும் மெய்ப்பொருளை உபதேசம் செய்து வைத்தோன்
ஔவியம் பேச தன்னருளை, தந்தவன்
அஃஎனும் ஆலயத்தில் அருளொளியைப் பொழிகின்றவன்

கொத்தரி குடிகொண்ட குலதெய்வமே வருக
குலம் தழைக்க வந்த குணக்குன்றே வருக
பக்தனை பாதுகாக்கும் பரமனே வருக
சோலையாண்டவ ஜோதியே வருக வருகவே!
வருகவே வாரிவழங்கும் அய்யனாய் வருக
வணிகுலம் தழைக்க வந்த ஆண்டவா வருக
சோலை சூழ நின்ற சுந்தரமே வருக
சோலையாண்டவ ஜோதியே வருக வருகவே

உய்வதோர் உறவுநாடி உலகத்தின் சமயந்தாண்டி
உன்னத வாழ்வு தந்த உளம்நிறை சோலையப்பன்
தன்னருள் அமுதத் தடங்கலில்லாமல் வந்து
தரிசனம் காட்டி நின்று தலைகாவலாய் நின்றான்

வாழவைத்த வள்ளலே வற்றாத கங்கையே வண்ண வடிவே
வளமெல்லாம் கொழிக்கச் செய்த வான்வெளியின் மேகமே
அய்யன் அய்யப்பனாய் வந்தாட்கொண்ட ஆண்டவரே
உய்யும் நெறிகாட்டி என்னை உன்னடிமை ஆக்கிக் கொள்வாய்

திகைத்திருந்தேன் சோலையாண்டவர் திருவருள் நோக்கி
என் திகைப்பெலாம் நீக்கி தன் திருவருள் தந்தான்
திகைப்பிலாததோர் தன் திருவடிகாட்டி
அய்யன் திகைப்பெலாம் நீக்கத் திருத்தி வைத்தானே

திருத்திவைத்த ஆண்டவன் திருவருள் அதனால்
திருந்தி உணர்ந்து அவன் திருவரள் பெற்று
திகைப்பெலாம் நீங்கிய அய்யன் திருவருளதனால்
திரு உருவாகவே திருந்தி விட்டேனே

ஏற்றிய விளக்குத்தன்னில் இருளற்ற ஒளியைக்கண்டு
இதமுடன் இதயத்திருத்தி இன்பமாய் வாழவைக்கும்
குலதெய்வமாய் வந்தாட்கொண்ட எங்கள்
சோலையப்பன் இணையடி போற்றுகின்றோம்

நாயகமாகி உயிர்கள் தோறும் நிறைந்து நின்ற ஆண்டவர்
தூய அடியார்கள் தொழும் துணைவா
கொத்தரியை தாயகமாகக் கொண்ட சோலையாண்டவா
நின்தாள் சரணமென வந்தடைந்தேன்

கனிந்தகனி அமுதே கண்கொள்ளா காட்சியே
கருணைக் கடலாய் வந்த கற்பகத்தரு உருவே
கந்தனுக்கு இளையோனாய் வந்த அய்யப்பா
அடியாரைக் காப்பதுவுன் மெய்யருளப்பா

பஞ்சபூதங்கள் கண்டறியா நற்பாக்கியத்தை
பரமசிவக் கொழுந்து நற்பாக்கியம் வழங்கும் பரமநிதியை
நம்நெஞ்சிற் குடிகொண்ட குலதெற்வமாம் பேரொளியை
சோலையாண்டவ ஜோதியை நினைவில் வைத்தேன்

என்னை உருவாக்கி என் எண்ணமேல்லாம் தனதாக்கி
தன்னை அறியத்தன்னமுதம் தந்த சோலையப்பா
என் எழுத்தை மெய்யாக்கி என் உயிரை ஒளியாக்கி
ஏற்ற வாழ்வளித்த இறைவன் சோலையப்பன்

தன் தோற்றம் காட்டி தொண்டன் ஆக்கிக் கொண்டான்
உள்மாற்றம் கண்டு உள்ளம் திருந்தப் பெற்று
தேட்டம் கொண்டு அவன் தெவிட்டாத வாழ்வும் பெற்றேன்
சிகரஜோதியே வருக சிங்காரத்திரு உருவே வருக

சிவசங்கரியின் பாலா வருக சிரத்தையுடைய அய்யப்பா வருக
சிதையா நெஞ்சளித்த சீலா வருக ஜீவஜோதியே வருக
சின்மயானந்த குருவே ஜெகந்தழைக்க வருக வருகவே
அருள்வடிவாய் என்னுள் வந்தமர்ந்த ஆண்டவா

பொருள் வடிவாய் என்னுள் பொருந்திய பூரணா
இருளற என்னுள் நீக்கமற நின்ற அய்யப்பா
உன்னை மருளற நின்று காண்கின்றேன் மாதேவா
தேனிருக்கும் கமலமலர் திருவிருக்கும் அய்யனார்பதி

தானிருக்கும் சோலைசூழ்ந்த கொத்தரியாம்; அவருளால்
நானிருக்கும் பள்ளத்தூர் நன்கு சிறந்து விரிந்து வளர்ந்து
வான்வெளி ஒளிபோல் வளர்பெறவே வேண்டுகின்றேன்
வேதங்கள் யாவையும் ஒன்றுதிரட்டி மெய்மடுத்து

மெய்அறிவை வளர்த்து வழிவழியாய் உள்நோக்கி பூசித்து
நெக்கு நெக்கு உருகி உள்ளம் கசிந்து சோலையாண்டவரே
நின் திருவடியே துணையென உன் சன்னதி வந்தமைந்தேன்
சோலையப்பனே மோனத்தலைவனே தூயவனே

கொத்தரியைக் குடியாகிக் கொண்ட சிற்பரனே
ஆண்டவனே அடியாரின் அன்பனே ஆதரித்து. காப்பாயென
நின் தாள் சரணமென வந்தடைந்தேன்
எங்கள் குலதெய்வமாகி எங்கெங்கும் நிறைந்து நின்ற

அய்யன் சோலையப்பன் ஆட்கொள்ள வந்துவிட்டான்
அடியவர் நாமெல்லோரும் அவனடி துதித்துப் போற்றி
ஆனந்த வாழ்வு தன்னை அவனருளால் அடைவோம்
ஆண்டவன் சோலையப்பன் அருந்தமிழ் குருவுமாகி

என்னையும் எனதுவம்ச பங்காளிகள் பரம்பரையும்
காத்து உன்னதப் பெருமை செல்வம் உயர்சுகம் யாவும்
தந்த குலதெய்வமாம் சோலையாண்டவரை வணங்குகின்றோம்
அவனருள் பெற்று நாமும் அவன் திருவடி தன்னைக் கண்டு
எப்பிறப்பிலும் பிரியா நின்று அவன் பேரருள் வாழ்வு கூடி
அவன் பெருந்தவப்பேற்றை பெற்று உத்தமர்களாய் வாழ்ந்து
நாமும் உலகு உய்ய ஒன்று சேர்வோம்.

ஒன்றே குலமென்றெண்ணி உன்னத வாழ்வைப் பெற்று
உறுதி குன்றாமல் உண்மை வழியில் சென்று
உறுதியாய் நின்று நாமும் அவன் திருவடி பற்றிக்கொண்டு
உத்தமன் சோலையப்பன் ஒளிதனைப் பெற்றுய்வோம்.

# இருவரும் ஒருவரே

சண்முகக்கவிமணி **சோலை. இராமச்சந்திரன்**

(டாக்டர். சீர்காழி சிவசிதம்பரம் அவர்கள் பாடிய ஒலிநாடா பாடல்)





ஏகன் அனேகன யோகசொ ரூபன்
இருவரும் ஒருவராய் இலங்கிடும் ரூபன்
இவர் அவர்தானோ அவர் இவர்தானோ
சோலை அய்யனே ஐயப்பனே
சோலை அய்யனே ஐயப்பனே
சோலைகள் சூழ வாவியின் வடபுறம்

சுகம்தர அமர்ந்தான் சோலை ஆண்டவன்
மாலைகள் சூழ மங்கல நாயகன்
மலைமேல் அமர்ந்தான் மணிகண்ட தேவன்
ஐயப்பா ஐயப்பா சாமியே ஐயப்பா
ஐயப்பா ஐயப்பா சாமியே ஐயப்பா

சோலைக்கு மத்தியல் சுந்தரக் கோலம்
சோலையாண்டவரு சுகம் தருவாரு
ஐந்து மலையிலே ஐயப்பன் கோலம்
அழகு ஜோதியாய் அருள்தருவாரு
ஐயப்பா ஐயப்பா சாமியே ஐயப்பா
ஐயப்பா ஐயப்பா சாமியே ஐயப்பா

வன்புலி மீதேறி வந்திடுவாரு
வில்லேந்தி வினைபோக்கி நலந்தருவாரு
புரவியின் மீதேறி பூமியை காக்க
வாளேந்தி வலம்வந்து வளம் தருவாரு
ஐயப்பா ஐயப்பா சாமியே ஐயப்பா
ஐயப்பா ஐயப்பா சாமியே ஐயப்பா

இத்தரை விசுதன்னில் சித்திரை மாந்தர்
சிறப்புர வரம்தரும் ஐயப்ப ராஜன்
சித்திரா பௌர்ணமி சிங்காரக் காட்சி
செல்வ நலந்தரும் சோலையாண்டவன் (சோலைகள்)

# பதினெட்டாம்படிக் கருப்பர் பதிகம்

சண்முகக்கவிமணி சோலை. இராமச்சந்திரன்



1. சோலைவிளத் தய்யனுடன் பரிவார தெய்வமாய்க்
   கீழ்திசைக் கோவில் கொண்டாய்
   வேழமொடு பலிபீடம் கொண்டாலும் வெற்றியாய்
   விரைந்துநீ செயல் முடிக்க
   கோலமிகு வாகனம் குதிரைமீ தேறிவரும்
   குன்றனய தோள் வீரனே
   மாலவனின் மறுஉறு மாகாளர் என்றான
   மாவீர கருப்ப துரையே

2. பேர்விளங்கச் செய்திடும் பெருமைகள் சேர்த்திடும்
   பெரிய கருப்பனும் நீ
   சீர்சிறக்கச் செய்திடும் சிங்கார ரூபனும்
   சின்னக் கருப்பனும் நீ
   கார்மேக வண்ணனே கலங்கரை விளக்கமென
   கனிவோடு அருள்வ ழங்கும்
   பேர்பெற்ற கருப்பனே பேராண்மை வீரனே
   பதினெட்டாம் படிக் கருப்பே

3. இத்தரையில் மாந்தர்கள் என்றுமுன் துணையோடு
   எழிலாக வாழ வேண்டி
   கொத்தரியில் கோயில்கொண்டு கொடுமைகள் அழித்திட
   கொலுவீற் றிருக்கும் வீரா
   நித்திரையில் நினைத்தாலும் நீள்முடி கிரீடமொடு
   நீதோன்றி எமை யாளுவாய்
   சித்தர்கள் சிலர்வாழும் திருச்சோலை வளர்ந்தாளும்
   செயல்வீர கருப்ப துரையே.

4. எனதென்றும் உனதென்றும் பிரித்துணரும் எண்ணங்கள்
   எப்போதும் எழுந்த தில்லை
   உனதருள் சிறப்புக்கள் ஒருபோதும் பொய்க்காது
   ஊராரை வாழ வைக்கும்
   நினைவிலே மாறாது நிதமுனை நினைக்கின்றோம்
   நெடியோனே கருப்ப துரையே
   தனதென்று தர்க்கமிடும் சதிகாரர் தண்டனிடச்
   சமன்செய்து ஆளு வாயே.

5. சோலைவளர் கருப்பனே சூர்பிபர சண்டனே
சூராதி சூர வீரா
காலையும் மாலையும் கைதொழக் காத்துமே
கனிவுடன் ஆளு வாயே
அள்ளி முடித்தஉன் அழகான கூந்தலே
ஆகாத பேய் விரட்டும்
துள்ளித் துடிக்கின்ற உன்மீசை கண்டாலே
தொடராது பில்லி சூன்யம்

6. மணிமாலைக் கோர்வையும் மேலாடு மாலையும்
மலைபோன்ற தோளா டுமே
மணிமார் பழகனே மாவீரா கருப்பனே
மாபலி கொள்ளும் தீரா
அணியிடை மிளிர்கின்ற அழகான கருங்கச்சை
அதிலாடும் செம்பட்டுமே
தனியாகத் தானொலிக்கும் தண்டையிரு கால்களில்
ஜல் ஜல்லென ஓசை யிடுமே

7. கங்கணம் கனகமணி கைகளில் மின்னலிடக்
கட்டியங் கூறி யாட
எங்கனும் ஒளிவீசும் எடுப்பான அரிவாளும்
எடுத்தொரு கையி லாட
எதிரொலி கிளப்பியே இயங்கிடும் சாட்டையும்
இன்னுமொரு கையி லாட
மிதிமிதி யென்றுநீ இடியென முழக்கவே
பிடிபே யெலா மோடுமே.

8. அதிரடிகள் செய்வோர்கள் அலறி கலங்கிட
ஆட்டிடும் அழகனும் நீ
மூதேவி காட்டேரி மூளியாய் ஆக்கிடும்
முத்துக் கருப்பனும் நீ
ஆதாரம் பூமியிடை ஆகியே நின்றிடும்
ஆகாயக் கருப்பனும் நீ
பதினெட்டாம் படிமேவி பாராளும் கருப்பனே
பண்பான தெய்வம் நீயே.

9. எறிசோ றெறிந்துமே எல்லைப் பிசாசுகளை
ஏவல்கொண் டாளு கருப்பே
கறிசோரு உதிரமும் கலந்துநீ வழங்கியே
காட்டேரி கைக்கொள் ளுவாய்
முப்பில்லி கொண்டுமே மூவாசை போக்கிட
எமக்கருள் நீசெய் குவாய்
ஒப்பிலா மாமுனி உன் தோழன் அல்லவா
பதினெட்டாம் படிக்க ருப்பே

10. உன்னையும் வேண்டியே ஊரார் அழைக்கின்றோம்
ஓடிவா கருப்ப துரையே
கண்ணிலே சூரியன் கலந்திட்ட காட்சியாய்
கணலாகத் தோன்றும் வீரா
தூபத்தில் தோற்றமும் சுடரான காட்சியும்
காணக்கண் கூசு தய்யா
தீபத்தில் நின்றுநீ தரிசனம் தந்திடு
பதினெட்டாம் படிக் கருப்பே

## கொத்தரி காட்டுக்குல்லே

பாவாக்கம் **ராமநாதன்**

கொத்தரி காட்டுக்குல்லே கோவில் கொண்ட
சோலை மலை சித்திரையில் விழா கண்டாராம்
அவர் சிங்காரமாய் பவனிவந்தாராம் (கொத்தரி)

நாட்டார்கள் ஒன்று கூடி நல்லதொரு நாள் பார்த்து
தோல் மீது சுமந்து வந்தாராம்- ஐயப்பன்
சொகுசாக பவனிவந்தாராம் (கொத்தரி)

கணபதியும் முன்னேவர கருப்பர் சாமி கூடவர
கால் நடையாய் சுமந்து வந்தாராம்
அய்யன் கணிவாக பவனிவந்தாராம் (கொத்தரி)

அஷ்டமியில் காப்புகட்டி ஆழகான
பவுர்ணமியில் கொத்தரியை சுற்றிவந்தாராம்
மக்கள் குரை நீக்கி காத்து வந்தாராம் (கொத்தரி)

மண்குதிரை காளைமாடு மனமுவந்து மக்களோடு
மகிழ்ச்சியாய் கொண்டு வந்தாராம்
அய்யன் மகிழ்வோடு ஏற்று கொண்டாராம் (கொத்தரி)

சித்திரையில் பூச்சொரிதல் சிறப்பாக அய்யனுக்கு
பக்தரெல்லாம் கொண்டு வந்தாராம் அய்யன்
பாதம்வரை கொட்டி மகிழ்ந்தாராம் (கொத்தரி)



# தாயாக இருப்பவளே முத்துமாரி அம்மா

### கணிதசாகரம் முத்துமாரிபெருமாள்
### (பாலையூர்)

முத்துமாரி அம்மா முத்துமாரி அம்மா - என்றும்
தாயாக இருப்பவளே முத்துமாரி அம்மா
ஊர் உலகம் காப்பவளே முத்துமாரி அம்மா
உன்பாதம் சரணடைந்தேன் முத்துமாரி அம்மா

குங்குமத்தில் ஒளிவீசும் முத்துமாரி அம்மா- முத்துக்
குமரனுக்கே தாயுமானாய் முத்துமாரி அம்மா
வைத்தியத்தின் சிகரமாம் முத்துமாரி அம்மா
வைத்யநாதனுக்கே துணையுமானாய் முத்துமாரி அம்மா

தங்கமுத்து மண்டபத்தில் முத்துமாரி அம்மா என்றும்
சிங்காரக் கொலுவிருக்கும் முத்துமாரி அம்மா
பொங்கிவரும் காவேரிபோல் முத்துமாரி அம்மா
தங்குதடை நீக்கிடுவாள் முத்துமாரி அம்மா

காட்டுவழி ஆனாலும் முத்துமாரி அம்மா- என்றும்
கனிவுடனே துணைவருவாள் முத்துமாரி அம்மா
கள்ளர்பயம் ஆனாலும் முத்துமாரி அம்மா
கலங்கவே விடமாட்டாள் முத்துமாரி அம்மா

செய்யும் தொழில் சிறக்கவேண்டும் முத்துமாரி அம்மாஅதில்
செல்வ வளம் பெருகவேண்டும் முத்துமாரி அம்மா
ஆறுநூறு ஆகவேண்டு முத்துமாரி அம்மா
ஆனந்தமே பொங்கவேண்டும் முத்துமாரி அம்மா

தாயே என்றும் உனை அழைத்தால் முத்துமாரி அம்மா
நோய்நொடிகள் நீங்குதம்மன் முத்துமாரி அம்மா
பேறுபெறச் செய்தவளே முத்துமாரி அம்மா
பிள்ளைகளைக் காக்கவேண்டும் முத்துமாரி அம்மா

மங்களமே பொங்கவேண்டும் முத்துமாரி அம்மா என்றும்
மகிழ்ச்சியுடன் வாழவேண்டும் முத்துமாரி அம்மா
அம்மா உனை அழைத்து முத்துமாரி அம்மா
அடிபணிந்தேன் உந்தன் பிள்ளை முத்துமாரி அம்மா



# அம்மன் அருள்

கணித சாகரம்
முத்துமாரி பெருமாள் பாலையூர்

பாலைய நாட்டைக் காத்து பல்பொருள் நலமும் சேர்த்து
நாளைய காலமெல்லாம் நல்லதாய் ஆக்குதற்கு
கோல விழியருளால் குழந்தை மனம் கொண்ட
சீலத் திருமகளே கீர்த்தி பெரியநாயகியே

வையத்தை வாழவைப்பாய் வளங்கொழிக்க மழைபொழிவாய்
செய்யும் தொழிலனைத்தும் சிறப்பிக்க அருள் புரிவாய்
மெய் புகழும் மாந்தர்கட்குமேன்மை நிலைதருவாய்
செய் உழவர் வயல் காக்கும் வயல் நாச்சியம்மா

புன்னகை பூத்திருக்க புவியெல்லாம் பார்த்திருக்க
வண்ணப் பட்டுடையில் இவ்வையகம் கண்டிருப்பாய்
மென்னகை அரும்பினால் இந்த மேதினி சிரித்திருக்கும்
பொன்னிற எதிர் முகத்தாள் பூமாத்தாள் பொன்னாத்தாள்

செப்பரிய புகழோடு செகமெல்லாம் வாழவைக்கும்
ஒப்பரிய தாய்நீயே உலகத்தின் காப்பு நீயே
எப்போதும் எங்கள் இதயத்தில் சுடர் ஏற்றும்
அற்புத எழில் மகளே அருள்மிகு கொப்பாத்தாள்

நலமெல்லாம் நீ கொடுப்பாய் நல்லவரைப் பாதுகாப்பாய்
குலம் காப்பாய் குடி காப்பாய் வலம் வருவோர் வாழ்வு காப்பாய்
நில மனைத்தும் காத்து பாலையநாடு தழைக்கச் செய்யும்
விளை நிலத்து முத்தாக விளங்கிடும் செல்லாயி

இடர்பாடு இல்லாமல் வல்லம்பர் குலத்தையெல்லாம்
விடிவான வழிகாட்டி வெற்றி பெறச் செய்துவரும்
குடிகாக்கும் தாயே உயர் கோட்டை நாச்சியம்மாளே
வடிவுடை நாயகியே வளமார் திருமகளே

ஈரெட்டுக் கிராமங்களும் இன்னபிற நிலங்களும்
பாரெல்லாம் போற்ற பல பெருமை மிகப்பெற்று
சீரும் சிறப்பும் செம்மையும் செழித்துவர
மாரியாய் காத்திவாய் மாமகள் முத்து மாரியம்மா.

## சோலை வளர் அய்யனாரே

பாடல், இசை, பிரான்மலை ஆறு. சொக்கலிங்கம்



சோலை வளர் அய்யனாரே
எங்க குறைதீர்க்கும் அய்யனாரே
கொத்தரிக்கு மேற்குப் பக்கம் காட்டுக்குள்ளே இருப்பாரு!
கையெடுத்துக் கும்பிடவே கஷ்டம் போக்க வருவாரு! (சோலை)

ஆணைமேலே அம்பாரி - முறுக்கு
மீசைக் காரன் சவ்வாரி
அள்ளி முடிஞ்சிருப்பார் - துள்ளிக் குதிச்சிடுவார்
அன்னதானம் செஞ்சுவச்சா ஆனந்தமா சிரிப்பாரு (சோலை)

அய்யா மேகம் எல்லாம் கூடனும் - நல்ல
மழையைப் பெய்ய வைக்கனும் - ஆஹா அள்ளி
அள்ளி முடிஞ்சிருப்பார் துள்ளிக் குதிச்சிடுவார்
அன்னதானம் செஞ்சிவச்சா ஆனந்தமா சிரிப்பா (சோலை)

சோலையா வரப்பு மறைஞ்சி ஒசரணும் - கருது
நெல்லுமணியா வெளையனும் ஆஹா அள்ளி.. (சோலை)

குறுது பானை நெறையனும் - எங்க
குடும்பம் பூரா பொழைக்கனும் - ஆஹா அள்ளி.... (சோலை)

தொட்ட வியாபாரம் துலங்கனும் - எங்க
குடும்பம் பூரா பொழைக்கனும் ஆஹா அள்ளி... (சோலை)

நீ மஞ்சக்கயிற தரவேணும் - நம்ம
பொண்ணு கல்யாணம் நடக்கனும் - ஆஹா அள்ளி ... (சோலை)

என் வம்சம் வாழ வைக்கனும் - ஒரு
பேரப்புள்ளையப் பாக்கனும் - ஆஹா அள்ளி (சோலை)

## சரணமப்பா ஐயப்பா

சரணமப்பா ஐயப்பா சுவாமியப்பா
சரணமப்பா ஐயப்பா சுவாமியப்பா

சரணமப்பா ஐயப்பாவில்லாளனி வீரனே வீரமணிகண்டனே
வன்புலியின் வாகனனே சரணம் ஐயப்பா..
இங்கு வேண்டும் வரம் தந்திடுவாய் சரணம் ஐயப்பா! (சரணமப்பா)

சுகமான சுமை ஒன்று தலைமேலே சுமந்தேனே
ஏந்திவரும் இருமுடியை ஏற்றுக் கொள்ளப்பா
இனி இன்பமான வாழ்வெனக்கு உண்மைதானப்பா (சரணமப்பா)

மலைக்கின்ற மலைப்பாதை
நடக்கின்ற அருள் வேண்டும்
பற்றிடுவேன் உனது கரம் சரணம் ஐயப்பா
எனைக் கரைசேர்க்க வைத்திடுவாய் சரணம் ஐயப்பா (சரணமப்பா)

மலைமேலே உனது இல்லம்
உடலெங்கும் வியர்வை வெள்ளம்
விட்டிழுக்கும் மூச்சில் கூட சரணம் அய்யப்பா
நான் சொல்லிடுவேன் சரணமப்பா சரணம் ஐயப்பா (சரணமப்பா)

என்பாதை எதுவென்று
அறியாமல் நடந்தேனே
உன் பாதை இதுவென்று சரணம் ஐயப்பா
நீ வழிகாட்டி நின்றாயே சரணம் ஐயப்பா (சரணமப்பா)

## கவலைப்படாதே மனமே

கவலைப்படாதே மனமே... மனமே...
கவலைப்படாதே மனமே
அய்யனை வணங்கிட அவர் புகழ் பாடிட
அபயக்கரம் நீட்டி ஆறுதலைத் தருவார்... (கவலைப்)

வகிருமுடி ஏந்திட இன்னல்கள் மறைந்திடும்
இல்லத்தில் இனிமேல் இன்பம் நிறைந்திடும்
கானக வாசன மனம் காணத்தில் மயங்கிடும்
காற்றும் ஸ்வரம் பேசும் காரிருள் விலகிடும். (கவலைப்)

பொன்னம்பலம் யாவும் பொன்மயமாகிடும்
வானில் ஒரு ஜோதி மின்னலாய்த் தோன்றிடும். (கவலைப்)

உன்தேவை எதுவென்று உத்திரன் மனம் அறியும்
நீயே கதி என்றால் அன்பு மனம் கரையும்
சங்கடம் யாவும் சரணத்தில் மறைந்திடும் (கவலைப்)

சங்கரன் மைந்தன் தரிசனம் கிடைத்திடும்
சங்கடம் யாவும் சரணத்தில் மறைந்திடும்
சங்கரன் மைந்தன் தரிசம் கிடைத்திடும் (கவலைப்)

## அபிராமி அந்தாதி

தனம்தரும் கல்விதரும், ஒருநாளும் தளர்வுஅறியா
மனம்தரதும், தெய்வ வடிவம் தரும், நெஞ்சில் வஞ்சம் இல்லா
இனம் தரும், நல்லன எல்லாம் தரும், அன்பர் என்பவர்க்கே,
கனம்தரும் பூங்குழலாள் அபிராமி கடைக்கண்களே

## ஸ்ரீ சோலை ஆண்டவர் துதி

### தேவிவரதராஜா B.Com., கொத்தரி



சோலைமலை நாயகனே - அய்யா
சுகம் பல அருள்பவனே,
நான் பாடிப்பாடி அழைக்கின்றேன்
என் பாட்டினிலே வருவாயே!

கொத்தரிச் சோலையிலே - அய்யா
என்குரல் உனக்கு கேட்கலையோ,
நான் கூறிவரும் அத்தனையும்
நீ அன்புடனே கேட்டிடுவாய்!

சித்திரை மாதத்திலே - அய்யா
நீயும் சிரிக்கும் காட்சியிலே,
என் சிந்தனைகள் அத்தனையும்,
உன் திருவடியே காணுதையா!

மாங்கல்யம் வேண்டிவந்தால் - அய்யா
நீ மன்னவனை தந்திடுவாய்,
குழந்தை வரம் வேண்டி வந்தால்,
நீ குழந்தையாக வந்திடுவாய்!

பௌர்ணமித் திங்களிலே - அய்யா,
உன்னை பலமுறை பார்த்துவந்தேன்,
என் பாடல்வரி அத்தனையும்
உன் பாதத்திலே வைத்துவிட்டேன்.

## காமாக்ஷி

மங்கள ரூபிணி மதியணி சூலினி மன்மத பாணியளே,
சங்கம் நீக்கிடச் சடுதியில் வந்திடும் சங்கரி சௌந்தரியே
கங்கண பாணியள் கனிமுகங் கண்டநல் கற்பகக்காமினியே
ஜெயஜெய சங்கரி கௌரி க்ருபாகரி துக்க நிவாரணி காமாக்ஷி

ஜெயஜெய பாலா சாமுண்டேஸ்வரி ஜெயஜெய ஸ்ரீதேவி
ஜெயஜெய துர்க்கா ஸ்ரீபரமேஸ்வரி ஜெயஜெய ஸ்ரீதேவி
ஜெயஜெய ஜெயந்தி மங்கள காளி ஜெயஜெய ஸ்ரீதேவி
ஜெயஜெய சங்கரி கௌரி க்ருபாகரி துக்க நிவாரணி காமாக்ஷி

## அபிராமி அந்தாதி

உதிக்கின்ற செங்கதிர் உச்சித்திலகம் உணர்வுடையோர்
மதிக்கின்ற மாணிக்கம் மாதுளம்போது மலர்க்கமலை
துதிக்கின்றமென்கொடி மின்கடிக்குங்கும தோயம்என்ன
விதிக்கின்ற மேனி அபிராமி எந்தன் விழுத்துணையே

### கவியரசு கண்ணதாசன் இயற்றிய
## பொன்மழைப் பாடல்கள்



மாலவன் மார்பில் நிற்கும் மங்கலக் கமலச் செல்வி
மரகத மலரில் மொய்க்கும் மாணிக்க சுரும்பு போன்றாய்
நீலமா மேகம் போல நிற்கின்ற திருமா லுந்தன்
நேயத்தால் மெய்சி லிர்த்து நிகரிலா செல்வம் கொண்டான்
மாலவன் மீது வைத்த மாயப் பொன் விழிஇ ரண்டை
மாதுநீ என்னி டத்தில் வைத்தனை என்றால் நானும்
காலமாக் கடலில் உந்தன் கருணையால் செல்வம் பெற்று
கண்ணிறை வாழ்வு கொள்வேன் கண்வைப்பாய் கமலத் தாயே!

நீலமா மலரைப் பார்த்து நிலையிலா தலையும் வண்டு
நிற்பதும் பற்பப தும்போல் நின்விழி மயக்கம் கொண்டு
கோலமார் நெடுமால் வண்ணக் குளிர்முகம் தன்னைக் கண்டு
கொஞ்சிடும். பிறகு நாணும் கோதையார் குணத்தில் நின்று.
ஏலமார் குழலி அந்த இருவிழி சிறிது நேரம்
என்வசம் திரும்பு மாயின் ஏங்கிய காலம் சென்று
ஆலமா மரங்கள் போல அழிவிலா செல்வம் கொண்டு
அடியவன் வாழ்வு காண்பேன் அருள்செய்வாய் கமலத் தாயே!

மந்திரம் உரைந்தாற் போதும் மலரடி தொழுதாற் போதும்
மாந்தருக் கருள்வேன் என்று மலர்மகள்நினைத்தால் போதும்
இந்திர பதவி கூடும் இகத்திலும் பரங்கொண் டாடும்!
இணையறு செல்வம் கோடி இல்லத்தின் நடுவின் சேரும்!
சந்திர வதனி கண்கள் சாடையிற் பார்த்தாற்போதும்
தாய்விழி பட்ட கல்லும் தரணியில் தங்க மாகும்!
எந்தவோர் பதவி வேண்டேன்! எளியனுக் கருள்செய் வாயே!
இகத்தினில் செல்வம் தந்து இயக்குவாய் கமலத் தாயே!

நற்குடிப் பிறந்த பெண்கள் நாயகன் தனைப் பார்த்தாலும்
நாணத்தால் முகம்பு தைத்து நாலிலோர் பாகம் பார்ப்போர்
பற்பல நினைத்த போதும் பாதிக்கண் திறந்து மூடி
பரம்பரை பெருமை காப்பார்! பாற்கடல் அமுதே நீயும்
அற்புத விழிக ளாலே அச்சுத முகுந்தன் மேனி
அப்படிக் காண்ப துண்டு! ஆனந்தம் கொள்வ துண்டு!
இப்பொழு தந்தக் கண்ணை என்னிடம் திருப்பு தாயே
இருமையும் செழித்து வாழ இகத்தினில் அருள்வாய் நீயே!

மதுஎனும் பெயரில் வாழ்ந்த மனமிலா அரக்கன் தன்னை
மாபெரும் போரில் வென்ற மாலவன் மார்பி லாடும்
அதிசய நீல மாலை அன்னநின் விழிகள் கண்டு
அண்ணலும் காலந் தோறும் ஆனந்தம் கொள்வ துண்டு!
பதுமநேர் முகத்தி னாளே! பதுமத்தில் உறையும் செல்வி!
பாற்கடல் மயக்கும் கண்ணை பதியின்மேற் பாய்ந்த கண்ணை
பேர்த்தெடுத் தென்மேல் வைத்தால் பிழைப்பன்யான் அருள்செய் வாயே
பேரருள் ஒருங்கே கொண்ட பிழையிலாக் கமலத் தாயே! (நல்லது)

கைபட அரக்கன் தன்னை கடிந்தநின் கணவன் மார்பு
கார்முகில் என்னத் தோன்றி கருணை நீர் பொழியுங் காலை
மைதவழ் மார்பில் வீசும் மயக்குறும் மின்னல் ஒன்று!
மயங்குவன் திருமால், பின்னர் மகிழ்வன் நின் விழிதானென்று
செய்தவப் பிருகு வம்சச் சேயெனப் பிறந்து எங்கள்
திருவென வளர்ந்த நங்காய்! தினமும்யாம் வணங்கும் கண்ணாய்
கொய்தெடு விழியை என்மேல் கொண்டுவந் தருள்செய் வாயே!
கொற்றவர் பணிகள் செய்யும் கோலமார் கமலத் தாயே! (நல்லது)

போரினில் அரக்கர் கூட்டம் புறங்கண்ட நெடியோன் தன்னை
போரின்றிக் குருதி யின்றிப் புறங்காணத் துடித்து வந்த
மாரனை ஊக்கு வித்த வாளெது கமல நங்காய்?
மங்கைநின் விழிக ளன்றோ மாலவன் தன்னை வென்ற!
தேரிய மாரன் உன்னைத் தேரெனக் கொண்ட தாலே
திருமலை வேங்க டத்தான் திறத்தினைவென்றான் அன்றோ!
கூரிய விழியாய் உனறன் குறுவிழி தன்னை என்பால்
கொண்டுவந் தால்யான் உய்வேன் கொடுத்தருள் கமலத் தாயே! (நல்லது)

நீருண்ட மேகக் கண்கள் நிழலுண்ட கரிய கூந்தல்
நேர்கொண்ட மாந்தர் வீட்டில் நிலைகொண்ட செல்வப் பந்தல்!
சீர்கொண்ட அமுதச் செல்வி சில்லென்ற காற்றுப் பாய்ந்தால்
சேர்கின்ற மேகத் தண்ணீர் சிறதுண்டு பாய்வதைப் போல்
வேர்கொண்ட பாவ மேனும் வினைகொண்ட பாவ மேனும்
வேய்கொண்ட தோளி னாய்உன் விழிகண்டால் தீர்ந்து போகும்!
தேர்கொண்டேன் புரவி இல்லை! செல்வமாம் புரவி யாலே
திருவருள் செய்வாய் நீயே தேப்பெரும் கமலத் தாயே! (நல்லது)

எத்தனை பேர்க்கும் கிட்டும் இறையருள் ஆன்ம சாந்தி!
இகமெனும் கடலில் வீழ்ந்து எவர் பிழைத் தார்கள் நீந்தி!
தத்துவப் படியே யாவும் தலைமுறை வழியே கிட்டும்!
தவமெனும் முயற்சி யாலே பலவினை தளர்ந்து போகும்!

அத்தனை முயற்சி என்ன அண்ணல்மா தேவி கண்ணில்
அருள்மழை வந்தாற் போதும் அகம்புறம் முக்தி யாகும் !
இத்தனை சொன்ன பின்பும் இன்னுமா தயக்கம் தாயே!
இல்லத்தை செல்வ மாக்கி இன்னருள் புரிவாய் நீயே!

ஆக்கலும் அளித்தல் காத்தல் அருள்நிறை இறைவன் சக்தி!
அன்னவன் தோளில் நீயே அனைத்துமாய் விளங்கும் சக்தி!
ஆக்கலில் வாணி யாவாய்; அளித்தலில் திருவாய் நிற்பாய்;
அழிக்கின்ற வேளை வந்தால் அந்தமில் துர்க்கை யாவாய்!
தீக்கொண்ட கரத்து நாதன் திருப்பரா சக்தி யாக
திரிபுரம் ஏழு லோகம் திருவருள் புரிந்து நிற்கும்!
வாக்குயர் கமலச் செல்வி வாடைநீ, தென்றல் நீயே!
வளமென இரப்போர்க் கெல்லாம் வந்தருள் புரிகின் றாயே!

வேத்தின் விளைவே போற்றி! வினைப்பயன் விளைப்பாய் போற்றி!
சீதத்தா மரையே போற்றி செம்மைசேர் அழகே போற்றி!
கோதைப்பண் புடையாய் போற்றி! குளிர்ந்தமா மழையே போற்றி!
ஓர்தத்து வத்தில் நிற்கும் உமையவள் வடிவே போற்றி!
பாதத்தைக் கமலம் தாங்க பல்லுயிர் காப்பாய் போற்றி!
நாதத்து நெடியோன் கொண்ட நங்கைநீ போற்றி! போற்றி!
பாதத்தில் சிரசை வைத்துப் பணிகின்றேன் போற்றி போற்றி!
மாதத்தில் ஒருநாள் கூட மறந்திடாய் போற்றி! போற்றி!

அன்றலர் கமலம் போன்ற அழகிய வதனி போற்றி!
அலைகடல் அமுத மாக அவதரித் தெழுந்தாய் ே பாற்றி!
குன்றிடா அமுதத் தோடு கூடவே பிறந்தாய் போற்றி!
குளிர்ந்தமா மதியி னோடும் குடிவந்த உறவே போற்றி!
மன்றத்து வெங்க டேசன் மனங்கவர் மலரே போற்றி!
மாயவன் மார்பில் நின்று மயிலெனச் சிரிப்பாய் போற்றி!
என்றைக்கும் நீங்கா தாக இருக்கின்ற திருவே போற்றி!
எளியவன் வணங்கு கின்றேன் இன்னருள் போற்றி! போற்றி!

தாமரை மலரில் நிற்கும் தளிரன்ன திருவே போற்றி!
தாமரை வதனங் கொண்ட தங்கமா மணியே போற்றி!
தாமரை கரத்தில் ஏந்தித் தவமென நிற்பாய் போற்றி!
தாமரைக் கண்ணான் காக்கும் தரணியைக் காப்பாய் போற்றி!
தாமரை போல வந்த தவமுனி தேவர்க் கெல்லாம்
தாமரைக் கைகள் காட்டி தயைசெயும் திருவே போற்றி!
தாமரைக் கண்ணால் செல்வம் தந்தருள் புரிவாய் போற்றி
தான் மறை தானே வார்த்தை தர்மமே போற்றி! போற்றி!

பெண்ணெனப் பிறந்தா யேனும் பெரும்திறன் கொண்டாய் போற்றி!
பிருகுவம் சத்தில் வந்த பீடுடை வதனம் போற்றி!
தண்ணளி வேங்க டத்தான் தழுவிடும் கிளியே போற்றி!
தத்துநீர்க் குளத்தில் ஆடும் தருணியே லக்ஷ்மீ! போற்றி!
சித்திரக் கொடியே போற்றி! செம்மணி நகையே போற்றி!
ஸ்ரீதரன் திருப்பா தங்கள் சேவைசெய் குயிலே போற்றி!
பத்தினிப் பெண்டிர் தம்மைப் பார்வையில் வைப்பாய் போற்றி!
பக்தருக் கருள்வாய் போற்றி! பணிந்தனம் போற்றி! போற்றி!

கண்களைப் பறிக்கும் காட்சி கவிந்தநின் வடிவம் போற்றி!
கமலப்பூ வதனம் போற்றி! கமலமா விழிகள் போற்றி!
மண்ணிலும் விண்ணு ளோர்க்கும் மங்கலம் நிறைப்பாய் போற்றி!
மண்டல இயக்கத் திற்கே மந்திர மானாய் போற்றி!
விண்ணவர் வணங்கும் தேவி விந்தையின் மூலம் போற்றி!
விரிமலர்க்க கண்ணன் தேவன் விரும்பிடும் நகையே போற்றி!
எண்ணிய படியே உன்னை ஏற்றினேன் போற்றி! போற்றி!
இசைபட வாழ வைப்பாய் இலக்குமி போற்றி! போற்றி!

மைவிழி குவளைக் கண்ணாய்! வரையிலாத் திருவே போற்றி!
வானவர் மண்ணோர்க் கெல்லாம் வணக்கமாய் நின்றாய் போற்றி!
மெய்விழி செவிவாய் நாசி விளைந்திடும் இன்பம் போற்றி!
விரித்தமேற் புலனுக் கெல்லாம் விளங்காத பொருளே போற்றி!
கைநிறை செல்வம் யாவும் கடைக்கண்ணால் அருள்வாய் போற்றி!
காக்கையை அரச னாக்கும் கைமலர் உடையாய் போற்றி!
செய்ததீ வினையை எல்லாம் தீர்க்கின்ற நெருப்பே போற்றி!
சிறுமையைப் பெருமை யாக்கும் திருப்பதம் போற்றி! போற்றி!

மோகனன் துணையே போற்றி! முழுநிலா வடிவே போற்றி!
மூவுல கங்கள் தேடும் முதற்பெரும் பொருளே போற்றி!
தேகத்தே ஒளியை வைத்த செம்மணிக் குன்றே போற்றி!
தீராத ஆசைக் குள்ளே திருவென நிற்பாய் போற்றி!
ஓர்கணம் தொழுதாற் கூட ஓடிவந் தளிப்பாய் போற்றி!
ஊர்ந்தமா மேக வண்ணன் உவப்புறச் சிரிப்பாய் போற்றி!
தாள்களில் பணிந்தே னம்மா தண்ணருள் தருவாய் போற்றி!
தலைமுதல் பாதம் மட்டும் தாழ்கின்றேன் போற்றி! போற்றி!

கண்பட்டால் மனது பாடும் கார்குழல் அலையே போற்றி!
காதள வோடும் கண்ணால் காசினி அளந்தாய் போற்றி!
வெண்பட்டால் அழகை மூடும் வியத்தகும் சிலையே போற்றி!
வெண்மல்லி கைப்பூ மாலை விளையாடும் தோளீ போற்றி!

பண்பட்டார் இல்லா தார்தம் பக்குவம் அறிவாய் போற்றி!
பணிபவர் இதயத் துள்ளே பாசுரம் படிப்பாய் போற்றி!
விண்முட்டும் ஞானம் பெற்ற வேதநா யகியே போற்றி!
வேயிரு தோளின் சக்தி விரித்தருள் போற்றி! போற்றி!

மண்டலத் திசைகள் தோறும் மதகரி குடங்கள் ஏந்தி
மங்கைக்கு நன்னீ ராட்ட கங்கைநீர் குடத்தில் மாந்தி.
தண்டலைக் கூந்தல் ஊற சர்வமங் களநீ ராட்டி,
தாமரைப் பூவின் மேலோர் தாமரைப் பூவைச் சூட்டி,
மண்டிய தூய்மைத் தாய்க்கு மற்றுமோர் தூய்மை நல்கி,
மருவிலாப் பளிங்கின் மேனி மாசறத்துலங்கச் செய்யும்
அண்டமா நெடியோன் தேவி, அலைகடல் அரசன் பெண்ணே!
அரிதுயில் கொள்ளும் காலை அடியவன் வணங்கு கின்றேன்!

பூவினில் உறையும் பூவே! பொன்னிடை உறையும் பொன்னே!
பூஜைக்கே உரியோன் பூஜை புரிகின்ற காதற் செல்வி!
ஏவுமோர் உலகத் துள்ளே இன்மையான் ஒருவ னேதான்
அவனுனை இரந்து நிற்க இதுவொரு நியாயம் போதும்!
தாவுநீர்க் கடலைப் போல தண்ணருள் அலைகள் பொங்கும்
சந்திரப் பிறைப்பூங் கண்ணி சற்றுநீ திரும்பிப் பார்த்தால்
மேவிய வறுமை தீர்ப்பேன்! மெல்லிடைப் பூங்கோ தாய், நின்
மின்னிடும் விழிகள் காண விழைந்தனேன் போற்றி! போற்றி!

முப்புவி ஈன்ற தாயே! மோகனச் சிரிப்பின் செல்வி!
மூவிரண் டொன்றாய் வந்த பிரமத்தின் மொத்த மாக
அற்புதம் காட்டி நிற்கும் அழகிய சிற்ப சோதி
ஆனந்தத் தெய்வ மாதா அரும்பெறல் அன்னை பேரில்
இப்பொழு துரைத்த பாடல் எவரெங்கு பாடி னாலும்
இப்புவி உளநாள் மட்டும் இன்பமும் அறிவும் சேரும்!
நற்பெரும் பேறும் கிட்டும்; நன்னிலை வளரும்;
என்றும் நாட்டுக்கே ஒருவ ராக நாளவர் உயர்வார் உண்மை!

---

## திருமகள்

சோலை. ராமச்சந்திரன்

செல்வம் பலவா ரானாலும் திருமக ளேநீ தலைமகளாம்
செல்வி உந்தன் தயவாலே சேரும் பற்பல செல்வங்கள்
எல்லாம் வல்ல இனியவளே என்றும் உந்தன் வரவாலே
உள்ளம் மகிழும் தூயவளே உனையும் துதித்தேன் திருமகளே

மாலவன் மனைவி இலக்குமியே மங்கலநாயகி நீயம்மா
வேலவன் மாமி திருமகளே வேண்டிய செல்வம் தருபவளே
காலம் முற்றும் உன்னாலே களிப்பே பற்றும் தன்னாலே
ஆலம் உண்டோன் தங்கையிவள் அள்ளித் தந்திடும் நங்கையிவள்.

## ஆறுமுகன் ஆனந்தக் கும்மி

சண்முகக் கவிமணி சோலை. இராமச்சந்திரன்



தானன்ன தானன்ன தானன்னனே தன
தானன்ன தானன்ன தானன்னனே
ஆனந்த மாகவே பாடுவோமே அந்த
ஆறுமு கனருள் தேடுவோமே

தேவாதி தேவருள் தெண்டனிட - அவர்
தேவைகள் எல்லாமே செப்பனிட
சூராதி சூரரும் ஓலமிட - சூர
சம்ஹாரம் செய்ததேனைப் பாடுவோமே (ஆனந்த)

மலையாகத் தோனுற வாழ்க்கயிலே - நாம்
மலைச்சு நிக்கிற நேரத்திலே
மலையாண்டி நம்மையும் பாத்திடுவான் - நாம்
மயங்காது வாழ்க்கையில் காத்திடுவான் (ஆனந்த)

திண்ணக் கிடைக்காத தீங்கனியை - அதை
தேடியே ஊட்டாத பெற்றவரை
எண்ண மனமின்றி வந்தாண்டி - நம்
ஏக்கத்தைப் போக்கிடும் நல்லாண்டி (ஆனந்த)

தந்தைதாய் தள்ளினான் கோபத்திலே - தவம்
தான்கொண்டு நிற்கின்ற கோலத்திலே
தந்தைதா யானானே ஞாலத்திலே - வரம்
தந்திடு வான்கலி காலத்திலே (ஆனந்த)

காலாலே தானாடும் காயத்தையே - அது
காலத்தில் கரைந்திடும் மாயத்தையே
காலத்தால் போக்கிடக் கந்தனையே - கண்டு
கைகூப்பி ஏத்துவோம் வந்தனையே (ஆனந்த)

வண்ணத் தினைப்புனக் காவலிலே - வள்ளி
வாழ்க்கயில் உன்னோடு சேர்ந்தனளே
தேனும் தினைமாவும் கூட்டிவைத்தே - தினம்
தின்னக் கொடுப்பாளே ஊட்டிவைத்தே (ஆனந்த)

மானைப் பிடித்திட வந்தவனாம் - வள்ளி
மானுக்கு தன்னையே தந்தவனாம்
புள்ளிமயில்மீது வந்தான்டி - அவன்
வள்ளிம ணாளனாய் வந்தான்டி (ஆனந்த)

## ஞானமலை அநுபூதி அழைப்பு

**சண்முகக் கவிமணி சோலை. இராமச்சந்திரன்**

**வா வா முருகா வடிவேல் அழகா வழித்துணைவருவோய் வா**
**வா வா முருகா வடிவேல் அழகா வழித்துணைவருவோய் வா வா வா**

சிந்தாமணியே செந்தாமரையே செந்தூர்அழகே வா
நந்தாவிளகே நவமணிச்சுடரே ஞானமலையோய் வாவாவா
எந்தாய் முருகா எனையாள்பவனே ஏரகத்துரையே வாவாவா
சிந்தாகுலமே சேராதெனையே தேற்றிய வேலா வாவாவா

ஆடும் பரிவேல் அணிசே வலெனப் பாடப் பணித்தோய் வாவாவா
தேடும் கயமா முகனைச்செருவில் சாடியோன் சோதர வாவாவா
நாடும் அடியார் நடந்தேவாரார் நடையினில் ஒளியாய் வாவாவா
கூடும் அடியார் கூப்பிடும் பஜனைக் கூட்டத்தில் ஒலியாய் வாவாவா

வானோ புனல்பார் கனல்மா ருதமோ வடிவேல் அழகா வாவாவா
ஞானோதயமே நவில்நான்மறையோ ஞானமலையோய் வாவாவா
கானல் நீராய் காட்சியும் வேறாய் காணும் நிலையினை நீக்கு
நாணல் ஆராய் நடையும்மாறா நாளும் நன்மையே ஆக்கு

உண்ணா முலையார் உமையாள் புதல்வா உலகாள்தலைவா வாவாவா
கண்ணார் அமுதே கருணைக்கடலே கந்தா முருகா வாவாவா
கண்ணாயிரத்தான் கண்வழி தோன்றிய கண்மணி முருகா வாவாவா
எண்ணாயிரமாய்ப் பண்ணாயிரத்தில் பழநிக்குமரா வாவாவா

உருவாய் அருவாய் உளதாய் இலதாய் உள்ளத்தொளிர்வோய் வாவாவா
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய் மனத்தே உரைவோய் வாவாவா
கருவாய் உயிராய் கதியாய் விதியாய் கணமும் நினைத்தேன் வாவாவா
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே குமரா முருகா வாவாவா

சகா தெனையே சரணங்களிலே சேர்த்திட நீயும் வாவாவா
காகா நமனார் கலகம் செயும்நாள் காத்திட நீயும் வாவாவா
வாகா முருகா மயில்வா கனனே வடிவேலெடுத்தே வாவாவா
**யோகா சிவனார் பாலா முருகா ஞானமலையோய் வாவாவா**

**சொல்லுங்க செல்லுங்க சொல்லுங்க....**

---

### வயலூர்

சத்த முடையசண் முகனே குகனே
வெற்பி லெறிசுட ரயிலா மயிலா
சக்தி கணபதி யிளையா யுளையா யொளி கூறுஞ்
சக்ர தரஅரி மருகா முருகா
உக்ர இறையவர் புதல்வர் முதல்வா
தட்ப முளதட வயலூ ரியலூர் பெருமானே

சண்முகக் கவிமணி சோலை. இராமச்சந்திரன்

**சொல்லுங்க செல்லுங்க வேல்வேல் நீங்க**
**சொல்லுங்க செல்லுங்க வேல்வேல்.**

வந்தேன் பிறந்தேன் வளர்ந்தேன் வாழ்ந்தேன்
வழிவகை செய்தவன் நீயலலையோ
தந்தாய் புகழைத் தமியேன் சிறந்து
தழைத்திடச் செய்தவன் நீயலலையோ (சொல்லுங்க)

வந்ததும் பிறந்ததும் வளர்வதும் வாழ்வதும்
வழிவழி தொடரும் வாழ்க்கைமுறை
எந்தாய் முருகா இதுவா பெருமை
எனைநீ ஒறுப்பதே எனதுகுறை (சொல்லுங்க)

குறைகளைச் சொல்லிக் கதறிப் புலம்பியும்
கூறிய உன்செவி கேட்கலையோ
மறைபுகழ் வேலா மாயோன் மருகா
மகனை உன்மனம் ஏற்கலையோ (சொல்லுங்க)

காலப் போக்கும் கருத்தைக் குலைத்தே
கலங்கிடச் செய்யுதே கதிர்வேலா
கோலக் காட்சி கொடுத்தே அருள்வாய்
குற்றம் குறைகள் அழிவதற்கே (சொல்லுங்க)

சூரனைப் போலொரு சூதும் சூழ்ச்சியும்
செய்தால் அழித்தெனை ஆண்டிருப்பாய்
சூரனைப் போன்ற துர்குண மின்றியே
சுடர்வடி வேலெனைக் காக்கிறதே (சொல்லுங்க)

காலம் முற்றும் களிப்பால் உன்னைக்
கனவிலும் மறவா நிலை தருவாய்
காலனும் வந்தெனைக் கயிறால்ப்பிணைத்தால்
காலால் உதைத்திட நீவருவாய் (சொல்லுங்க)

காலால் நடந்துணைக் காணும் ஆசையில்
கால்நடை போன்று வருகின்றோம்
தோளால் காவடி சுமந்துன் சேவடி
தொழுதே காணிக்கை தருகின்றோம். (சொல்லுங்க)

---

## வைத்தீஸ்வரன் கோவில்

வாதக்கா லாந்தமக்கு மைத்துனர்க்கு நீரிழிவாம்
பேதப் பெருவயிறாம் பிள்ளைக்கு - ஒதக்கேள்
வந்தவினை தீர்க்க வகை அறியார் வேளூரர்
எந்தவினை தீர்ப்பார் இவர் - காளமேகம்

## மங்கையர்கள் மாலை பெற

சண்முகக் கவிமணி சோலை. இராமச்சந்திரன்

**வேல்முருகா வேல்முருகா வேல்முருகா வேல்முருகா**
**வேல்முருகா வேல்முருகா வேல் வேல்**

மங்கலத்து நாயகனே மாமலையில் வாழ்பவனே
மாதிருவர் மாலையிட நின்றாய்
எங்கழுத்து மாலைபெற ஏற்றமிகு வாழ்பெற
ஏனோ எனைமறந்து சென்றாய் (மங்கல)

எங்கேநீ சென்றாலும் ஏறெடுத்துப் பாராமல்
இருக்கஉனை விடமாட்டேன் வேலா
பொங்குதமிழ்ப் பாட்டாலே பூரித்துப் பாடியுனைப்
பூட்டி வைத்துப் பார்த்திடுவேன் பாலா (மங்கல)

ஆறுபடை வீடுகளில் ஆனந்த மாயிருந்து
ஆளுகின்ற அன்புவடி வேலா
வேறுபடை வீடுகளும் வேண்டிநீ தோன்றிடினும்
விட்டுவிட மாட்டேனே பாலா (மங்கல)

சீர்வரிசை வேணுமென்ற சிக்கலிலே மாட்டாமல்
செய்திடுவாய் சிக்கல்வடி வேலா
ஏரகத்துச் செட்டிமகன் இருக்கையிலே எங்களுக்கு
என்னகுறை எட்டுக்குடி வேலா (மங்கல)

செவ்வாயின் காட்சியிலே தோஷமென்ற ஆட்சியிலே
சீரழிவு போதாதோ முருகா
செவ்வாயின் கோலத்திலே தென்பழநீ ஆள்பவனே
சேயிழையார் மாலைபெற தருவாய் (மங்கல)

காத்திருந்து காத்திருந்து காலமெல்லாம் தேடியுன்னைக்
காணாமல் கலங்குகிறேன் சுவாமி
யாத்திரையில் காவடிக்குள் பாட்டொலியில் நீயிருக்க
நானும் வந்தேன் நல்லவழி காமி (மங்கல)

---

**குன்றக்குடி**

முடியானை முடிபதித்த முடியானை
கருமைநிற முகிலார் குன்றக்
குடியானை அடியார்மனக் குடியானை
மாறாது கொடுக்கும் அன்னக்
கொடியானை யொருசேவற் கொடியானை
குகனென்றே குவியார் நெஞ்சம்
படியானை ஏழேழு படியானை
அனுதினமும் பரவி வாழ்வாம் (மதுரகவி ஆண்டவன்)

## திருப்புகழ்

### இராமேஸ்வரம்

தான தன தான தன தான தன தான தன     தான

வாலவய தாகியழ காகிமத நாகிபணி
வாணிபமொ டாடிமரு ளாடிவிளை யாடிவிழல்
வாழ்வுசத மாகிவலு வாகிமட கூடமொடு பொருள்தேடி
வாசபுமு கோடுமல ரோடுமன மாகிமகிழ்
வாசனைக ளாதியிட லாகிமய லாகிவிலை
மாதர்களை மேவியவ ராசைதனி லேசுழல     சிலநாள் போய்த்

தோல்திரைக ளாகிநரை யாகி குரு டாகியிரு
கால்கள்தடு மாறிசெவி மாறிபசு பாசபதி
சூழ்கதிகள் மாறிசுக மாறிதடி யோடுதிரி     உறுநாளிற்

சூலைசொறி ஈளைவலி வாதமொடு நீரிழிவு
சோகைகள மாலைசுர மோடு பிணி தூறிருமல்
சூழலுற மூலகசு மாலமென நாறியுடல்     அழிவேனோ

தாலுமுக னாதியரி யோமெனஅ தாரமுறை
யாதபிர மாவைவிழ மோதிபொரு ளோதுகென
நாலுசிர மோடுசிகை தூளிபடத் தாளமிடும்     இளையோனே

நாறிதழி வேணிசிவ ரூபகலி யாணிமுத
வீணமக வானைமகிழ் தோழவன மீதுசெறி
ஞானகுற மாதுதினை காவில்மண மேவுபுகழ்     மயில்வீரா

ஓலமிடு தாடகைசு வாகுவள ரேழுமரம்
வாலியொடு நீலிபக னோடொருவி ராதனெழு
மோதகட லோடுவிறல் ராவணகு ழாமமரில் பொடியாக
ஓகைதழல் வாளிவிடு மூரிதது நேமிவளை
பாணிதிரு மார்பனரி கேசன்மரு காவெனவே
ஓதமறை ரா மெசுர மேவுகும ராவமரர்     பெருமாளே

---

### ஆறாவது படைவீடு பழமுதிர்ச்சோலை

எழமுதி ரைப்புனத்து இறைவி முன்புதன்
கீழமுதிர் களியென வருதல் வேண்டிய
பழமுதிர் சோலையம் பகவற் போற்றுவோம்     கந்தபுராணம்

## மாயூரகிரி (குன்றக்குடி)

நாமேவு குயிலாலும் மாமாரன் அயிலாலும்
நாடோறும் மதிகாயும் வெயிலாலும்
நார்மாதர் வசையாலும் வேயூதும் இசையாலும்
நாடாசை தருமோக வலையூடே
ஏமாறி முழுநாளு மாலாகி விருதாவி
லேவாரும் விழிமாதர் துயரூடே
ஏகாமல் அழியாத மேலான பதமீதி
லேகீயு னுடன்மேவ அருள்தாராய்
தாமோக முடனூறு பால்தேடி உரலூடு
தானேறி விளையாடும் ஒருபோதில்
தாயாக வருசோதை காணாது களவாடு
தாமோத ரன்முராரி மருகோனே
மாமாது வனமாது கார்மேவு சிலைமாது
மாலாகி விளையாடு புயவீரா
வானாடு புக்நாடு தேனாறு புடைசூழும்
மாயூர கிரிமேவு பெருமாளே

உரலுடன் ஏறி விளையாடிய போதில், தான் ஆசையுடன், கறந்த பாலைத்தேடி யசோதையாகிய தாய் காணாத வண்ணம் அதனைக் களவாடிய தாமோதரனாம் முராரியின் மரகனே! சிறந்த மாது; நாட்டில் வாழ்ந்த மாது; மேகம் சூழ்ந்து மலையில் வாழ்ந்த மாது ஆகிய வள்ளி ஆசையுடன் விளையாடும் புயங்களை உடைய வீரனே! வான நாடரும் புகழும் நாடாம் தேனாறு சூழும் மாயூரகிரி எனும் குன்றக்குடியில் விளங்கும் பெருமாளே! குயிலாலும், மன்மதனது பாணங்களாலும், நிலாவின் ஒளியாலும், மாதர்களின் பேசும் வசைமொழியாலும், புல்லாங்குழல் இசையாலும் விரும்புகின்ற ஆசையால் மோக வலைக்குள்ளே நான் ஏமாற்றம் அடைந்து நாள் முழுவதும் வீணாகவே, மாதர்களால் வரும் துயர்க்குள்ளே செல்லாமல், அழிவில்லாததும் மேலானதுமான நிலையை அடைந்து உன்னுடன் பொருந்தி இருக்க அருள்தருவாயாக.

---

## ஐந்தாவது படைவீடு திருத்தணி

பாதகம்பல செய்தவராயினும் பவங்கள்
ஏதம் வைகலும் புரிபவ ராயினும் எம்பால்
ஆத ரங்கொடு தணிகைவெற் படைவேல் அவரே
வேதன் மாலினும் விழுமிய ரெவற்றிலு மிக்கார் கந்தபுரானம்

கோடாத வேதனுக்கு யான்தெய்த குற்றமென்ன குன்றெறிந்த
தாடானனே தென்தணிகைக் குமராநின் தண்டையந்தாள்
சூடாத சென்னியும் நாடாத கண்ணும் தொழாதகையும்
பாடாத நாவும் எனக்கே தெரிந்து படைத்தனனே கந்தர் அலங்காரம்

## கந்தரநுபூதி

### மையல் விடுவது எப்போது



மட்டூர் குழல் மங்கையர் மையல் வலைப்
பட்டு ஊசல்படும் பரிசு என்று ஒழிவேன்?
தட்டுஊடு அற வேல் சயிலத்து எறியும்
நிட்டூர நிராகுல நிர்ப்பயனே!

**மரணபயம் நீங்க**

தார்மா மிசை காலன் வரின் கலபத்து
ஏர்மா மிசை வந்துஎதிர்ப் படுவாய்!
தார் மார்ப! வலாரி தலாரிஎனும்
சூர்மா மடியத் தொடு வேலவனே!

**எனக்கு மெய்ப்பொருள் கூறியவன்**

கூகா என என்கிளை கூடி அழப்
போகாவகை மெய்ப்பொருள் பேசியவா
நாகாசல வேலா நாலுகவித்
தியாக! சுரலோக சிகாமணியே!

**உலகப்பற்று விட்டது**

செம்மான் மகளைத் திருடும் திருடன்
பெம்மன் முருகன் பிறவான் இறவான்
சும்மா இருசொல் அற என்றலுமே
அம்மா! பொருளொன்றும் அறிந்திலனே

**அவன் அருளால் அவனை அறிய வேண்டும்**

முருகன் தனிவேல் முனிநம் குருஎன்று
அருள் கொண்டு அறியார் அறியும்தரமோ?
உரு அன்று; அருஅன்று; உளதுஅன்று; இலதுஅன்று;
இருள் அன்று; ஒளி அன்று; என நின்றதுவே

**மனமே! ஆசையினை ஒழி**

கைவாய் கதிர்வேல் முருகன் கழல் பெற்று
உய்வாய் மனனே! ஒழிவாய் ஒழிவாய்
மெய்வாய் விழி நாசியொடும் செவியாம்
ஐவாய் வழி செல்லும் அவா வினையே

**முருகப் பெருமான் தன்மைகள்**

உதியா மரியா உணரா மறவா
விதிமால் அறியா விமலன் புதல்வா!
அதிகா! அனகா! அபயா! புதல்வா!
பதி காவல! சூர பயங்கரனே

## வாழ்த்து!!

நாதவிந்து கலாதீ நமோ நம
வேதமந்த்ர சொரூபா நமோ நம
ஞானபண்டித சாமீ நமோ நம வெகுகோடி

நாமசம்பு குமாரா நமோ நம
போக அந்தரி பாலா நமோ நம
நாகபந்த மயூரா நமோ நம பரசூரர்

சேததண்ட விநோதா நமோ நம
கீத கிண்கிணி பாதா நமோ நம
தீர சம்ப்ரம வீரா நமோ நம கிரிராஜ

தீபமங்கள ஜோதீ நமோ நம
தூய அம்பல லீலா நமோ நம
தேவகுஞ்சரி பாகா நமோ நம அருள்தாராய்

ஈதலும்பல கோலால பூஜையும்
ஓதலுங்குண ஆசார நீதியும்
ஈரமுங்குரு சீர்பாத சேவையும் மறவாத

ஏழ்தலம்புகழ் காவேரி யால்விளை
சோழமண்டல மீதே மனோகர
ராஜகெம்பீர நாடாளு நாயக வயலூரா

ஆதரம்பயி லாரூரர் தோழமை
சேர்தல் கொண்டவ ரோடே முனாளினில்
ஆடல் வெம்பரி மீதேறிமாகயி லையிலேகி

ஆதியந்தவு லாவாசு பாடிய
சேரர் கொங்குவை காவூர்நனாடதில்
ஆவினன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே

ஆறிரு தடந்தோள் வாழ்க ஆறுமுகம் வாழ்க - வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க, குக்குடம் வாழ்க - செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க யானைதன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க வாழ்கசீர் அடியார் எல்லாம்.

வான்முகில் வழாது பெய்க மலிவளம் சுரக்க மன்னன்
கோன்முறை அரசு செய்க குறைவிலாது உயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க நற்றவ வேல்வி மல்க
மேன்மைகோள் சைவ நீதி ஓங்குக உலகமெல்லாம்.

## கொத்தரி அருள்மிகு சோலைவளர்த்த அய்யனார் திருக்கோவில் அறங்காவலராக 1948க்கு முன்பு நான்குகரை வல்லம்பர்கள் சமுதாய பேரவை கீழ்க்கண்டவர்களை தேர்ந்தெடுத்து நிர்வாகம் செய்தவர்கள்

1. ராம. சேதுராக்கி சேர்வை அவர்கள்
2. சொ. முத்தையா அம்பலம்
3. மு. சொ. சிதம்பரம் அம்பலம்
4. சே.ராம. வடமலைசேர்வை
5. மு. சொ. சித. சோலைமலை அம்பலம்
6. மு. பொன்னம்பலம் அம்பலம்
7. பூ. பெரி. சிதம்பரம் அம்பலம்
8. பூ. பெரி. பெரியகருப்பன் அம்பலம்
9. சொ. கு. வெள்ளையனம்பலம்
10. சொ. கு. பெரியய்யா அம்பலம்
11. மு. பழ. சோலையன் அம்பலம்
12. மா. சித. ராமசாமி சேர்வை
13. ஆ.சி. ராமசாமி அம்பலம்
14. மா. ச. மு. சோலையன் சேர்வை
15. மு. சி. குமரப்பன் அம்பலம்
16. சே. ராம. அழகர் சேர்வை
17. ராம. சோ. பெரியணன் சேர்வை
18. பி. ராம. ராமசாமி அம்பலம்
19. சே. ராம. ராமசாமி சேர்வை
20. ஆ.சி. ராமசாமி அம்பலம்
21. பூ. சோ. சோலையன் அம்பலம்
22. பூ. சித. பெரியகருப்பன் அம்பலம்

---

## 1948 முதல் 1970 வரை அருள்மிகு சோலைவளர்த்த அய்யனார் திருக்கோவில் அறங்காவலராக நிர்வாகம் செய்தவர்கள்

1. சி. அழ. சின்னக்கருப்பனம்பலம்
2. சுப. பெரியய்யா அம்பலம்
3. மா. சோ. சிவானந்தம் சேர்வை
4. கு.ராம. சோலையன் அம்பலம்
5. சொ. சோ. நடேசன் அம்பலம்
6. வ. சொ. கண. ராமசாமிசேர்வை
7. சொ. கு. பெரி. குமரப்பனம்பலம்
8. கு. கரு. சோலையன் அம்பலம்
9. பூ. சித. ராமசாமி அம்பலம்
10. கண. ராமசாமி சேர்வை
11. மா.பெரி. வீரப்பன் சேர்வை
12. கா. சுப. பெரியய்யா அம்பலம்
13. பூ.கரு.பெரி. பெரியணன் அம்பலம்

## 1971 முதல் 2005

## கொத்தரி ஸ்ரீ அருள்மிகு சோலைவளர்த்த அய்யனார் திருக்கோவில் அறங்காவலராக நிர்வாகம் செய்தவர்கள்

1. கண. இராமசாமி சேர்வை
2. பி. சோ. சோலைமலை அம்பலம்
3. கா. பெரி. சிதம்பரம் அம்பலம்
4. பூ. சித. இராமசாமி அம்பலம்

1. கரு. சோ. வெள்ளச்சாமி அம்பலம்
2. பி. சோ. சோலைமலை அம்பலம்
3. கா.பெரி. சிதம்பரம் அம்பலம்
4. பூ. சுப்பையா அம்பலம்

1. கு. ராம. சோ. கருப்பையா அம்பலம்
2. பி. சோ. சோலைமலை அம்பலம்
3. கா. பெரி. சிதம்பரம் அம்பலம்
4. பூ. பெரி. சுப்பையா அம்பலம்

---

## கொத்தரி நாட்டார் 1971 முதல் 2005 வருடம் நிர்வாக டிரஸ்ட்டிகள்

1. கண. ராமசாமி சேர்வை
2. பெரி. வீரப்பன் சேர்வை

1. கும. சபாபதி அம்பலம்
2. கரு. பெருமாள் அம்பலம்

1. மு.பழ. சோ. கருப்பையா அம்பலம்
2. பி. சோ. சோலைமலை அம்பலம்

1. சோ. கும. சோலையன் அம்பலம்
2. கரு. பெருமாள் அம்பலம்

1. கும. காளிமுத்தன் அம்பலம்
2. வீர. சோலையன் சேர்வை

1. பூ. ராம. கிருஷ்ணன் அம்பலம்
2. கரு. பெருமாள் அம்பலம்.